பயிர் - என்பது - பயிற்சி - முயற்சி - யெனவுங்கொள்ளப்படும் - ஆதலால்பயிர்செய்வதிலியற்றப்படும் முயற்சியேசெல்வப்பேறுக்குமுதற்குறியாம்.

உழவுமுதலியவைகளில்வருத்தமுற்று இட்டபயிர்பலனைக்கொடுக்குங்காலத்தில் சோம்பலால் தக்கப்படிநடத்தவறியாதவன்தரித்திரத்தையடைவான்.

எல்லாக்காரியங்களிற்கும்அவைகளாலடையும்பயனுக்கும்தெய்வகாரணத்தைப்பார்க்கிலும்- புருஷகாரணமே மேலானதாகும் - எப்படியெனில் - ஒற்றைத்தேருருளையால் - இரதம்நடவாத்தன்மைபோற்புருஷகாரமில்லாமல் தெய்வசங்கற்பத்தினு லொன்று முடியாது.

எள்ளும் - அதற்குள் எண்ணெயும் பகவனாலுண்டாக்கப்பட்டிருந்தாலும் புருஷகாரமென்கிறமுயற்சியினாலல்லாமல் எண்ணெய்வெளிப்படுவதில்லையே - ஆதலால் முயற்சியின்றி ஒன்றும்நிறைவேறாது - அஃதில்லாமற் சோம்பலுற்றவன் பயன்படான்.

முயற்சியில்லாவிடின் - கல்வியில்லை - கல்வியில்லாவிடின்புத்தியுமில்லை பராக்கிரமமுமில்லை - இவைகளில்லாவிடின் பொருளுமில்லை பெருமையுமில்லை - சிலவேளை பொருள்மாத்திர மிருந்தாலும் - பயன்படாது - ஆதலால் முயற்சியில்லாவிடி னொன்றுமில்லையென்பதற்கு அனுமானிக்கவேண்டுவதில்லை.

முயற்சியுள்ள புருஷசிங்கத்தையே மகாலக்ஷ்மி யடைகிறாள் தெய்வத்தினால் பாக்கியங்கொடுபடவேண்டுமென்று ஆலசியமாகி யசொப்பதும் அவிவேகமாகிய தெரியாமையுமுள்ளபுருடர் நினைக்கிறார்கள் ஆகையால், தைவத்தினிடத்தில் நம்பிக்கையை விட்டு சொந்தச் சக்தியினாலே முயற்சிசெய்தும் ஒருவேளைகாரியம் - சாதிக்கப்படாமற்போனால் குற்றமென்ன வென்று ஒருவித்துவா னுரைத்திருக்கிறார் - அதையோசித்தால் - எளிதில் தெரிந்துகொள்ளலாகும்.

தெய்வத்தால்யாவும் நடக்குமென்று முயற்சியைக்கைவிட்டவன் கெட்டுப்போவான் - புருஷகாரமில்லாமல் தெய்வஞ்சித்திக்கிறதில்லையென்பதை யறிந்தவனேபுத்திமான்.

பலவற்றிலுஞ் சென்றுழன்றலைகின்ற மனதைவிவேகத்தால் தடுத்து, நிலைக்கச் செய்வதே மோக்ஷத்திற்கு முக்கியகாரணமான முயற்சியாம்.

கஷ்டதசையிலிருக்கும் ஒருவன் அக்கஷ்டத்தைப் பாராட்டாமல் பிரயோசனத்தைக்கொடுக்குந் தொழிலின்னதென்றும், அதனிடத்து மனதைச்செலுத்தி முயற்சிசெய்தால் பிரயோசனத்தையடையலாகுமென்றும், புத்திக்கூர்மையால் கருத்திருந்து நடப்பானாகில், அவனுக்குச்செல்வமும் பெருமையும் ஏன் உண்டாகாமற்போகும்? உண்டாவதுசித்தமே.

செய்யத்தக்ககாரியமின்னதென்றும், அதனிடத்து புத்தியைச்செலுத்தி முயற்சிசெய்தால் பலனுண்டாகுமென்றும் தெரிந்திருந்தும், சோம்பலால் அதைக்குறித்துமுயற்சிசெய்யாமல்தரித்திரத்தால்வருந்துவோன் கல்வியிற்சிறந்தவனாக விருந்தாலும், அவனை அப்பிரயோசகனென்றுஉலகம்பழிக்கும். இவ்விதப்பழிப்புக்காளாவதைவிட இறத்தலும் நலமாகவிருக்கும்.

பிறருக்குபகாரஞ்செய்வதினிடத்துபுத்தியைச் [illegible]சாரவிடாமலிருப்பவனே பலநன்மைக்கும் ஆதாரமாகியமுயற்சி[illegible]னிடத்து சிந்தையுடையவனாக விருப்பான்.

முயற்சிசெய்வதில் சிரத்தையில்லாதவன் பரோபகாரஞ் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தைமாத்திரங் [illegible]ருந்தால் அவ்வெண்ணம் முடிவுபெறாது

எளிதில்பெறத்தக்க பலநன்மைகள் தனக்கெதிராகவிருந்தும், முயற்சியின்மையால் சோம்பலுற்று அவைகளைப்பெறாமல்விட்டுவிடுகிறவன் யாதொருபயனும் அடையமாட்டான். அஃதெவ்வாறெனின், எல்லாவுயிரையும் வதைப்பதற்குக்காரணமாகிய கூர்மையுடைய வாளாயுதம் பேடிகையில் விளங்கிக்கொண்டிருந்தால், அதனால்யாதுபயன்?

உபகாரிகளாகவிருக்கின்ற நல்லோர்கள் தங்களுடைய சவுக்கியத்தை விரும்பாமலே ஒருகாரியத்தில்பிரவேசித்து அதுமுடிவுபெறும்படிக்குத்தக்கமுயற்சியைச்செய்து அதனாலாகியதிரவியசம்பாதனையைத் தன்சுற்றத்தார் நட்பினர் முதலாகியவர்களுக்குண்டாகிய துன்பங்களைமாற்ற உபயோகப்படுத்தி அவர்களுக்குச் சவுக்கியத்தை யுண்டாக்குவார்களென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அஃதெவ்வாறெனின், மாளிகைமுதலாகிய வீடுகளினாலே தூண்களுக்குயாதொருநன்மையுமில்லாதிருந்தாலும், அத்தூண்கள்தங்கள்வருத்தத்தை நினையாமலேயம்மாளிகையைத்தாங்கிக்காப்பாற்றுவது போலவாம். ஆதலால் இவர்களைத்தாங்குவோரென்று நாயனாருஞ்சொல்லியிருக்கிறார்.

முயற்சியினிடத்து மனத்தளர்ச்சியில்லாதவனுக்குச் செல்வம் வளர்ந்தேறுமென்றும், அம்முயற்சியில்மனஊக்கமில்லாதவனிடத்து வறுமை நிரந்தரங் குடிகொண்டிருக்குமென்றும் சொல்லப்படும், இந்தநீதியையறிந்து நடக்கின்றவனுக்கு எல்லாநன்மையும் எளிதில்வந்து கைகூடும்.

மூதேவிசோம்பலையுடையவனிடத்து வாசஞ்செய்துகொண்டிருப்பாளென்றும், சோம்பலையகற்றி நன்முயற்சிசெய்பவனிடத்து சீதேவி நர்த்தனஞ்செய்துகொண் டிருப்பாளென்றும், முன்னோர்கள்சொல்லிய நீதிவாக்கியம் இப்போது அநுபவத்திற்குஞ் சரியாகவிருப்பதால்யாவரும்முயற்சிசெய்வதில் சிரத்தையுடையவர்களாக விருக்கவேண்டும்.

ஒருதொழிலினிடத்து முயற்சிசெய்தும் ஊழினாலாகிலும்தெரியாத மற்றகாரணத்தினாலாகிலும்பலன்கிடையாமற்போனாற் குற்றமொன்றுமில்லை. இதற்காக உலகம்பழியாது. ஆனால்விதியில்லையென்று முயற்சியைக்கைவிட்டுச் சோம்பலுற்றவனை உலகம்பழிக்கும்.

ஊழினாலொன்றுமடைவதற்கிடமில்லாதிருந்தாலும்மனவுறுதியுடையவன் தனது நன்முயற்சியால் அவ்வூழையுங்கடந்து நடப்பானென்று அறிவுடையோர்சொல்லியிருப்பதற்கு நிதர்சனமென்னவெனில்-பதினாறு வயதிற்கதிகமில்லாதமார்க்கண்டேயன் தன்னுடைய மனஊக்கத்தின்முயற்சியால் என்றும் பதினாறு வயதையுடையவனாக விருந்தானென்கிற பிரமாணமிருக்கவில்லையா?

ஒருகாரியத்தைமுயன்று நடத்திவரும்போது அதற்குப் பலவிகாதங்கள் மேன்மேலும்வருமாயினும், அவைகளுக்கு இடங்கொடாமலும், மனங்கலங்காமலும், தான்தொடங்கியகாரியத்திற்குப் பங்கம்வராமல் நிறைவேற்றுகிறவனுக்குச்சமானம் உலகத்திலொருவனுமாகமாட்டான்.

கரைபிரண்ட வெள்ளம்போல் பலதுன்பம்வந்தாலும் அதை உள்ளத்தில் உன்னிப்பார்த்து மனமகிழ்ச்சி கொண்டிருப்பவனுக்கு அத்துன்பம் ஊழினால்வந்ததானாலுமுடனேகெடுமென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

உளையிலழுந்திய வண்டியைக்கடா தன்வருத்தத்தைப்பாராட்டாமல் மாருரங்கொண்டிழுப்பதுபோல நன்முயற்சியிற்புத்தியுடையவன் தான்நடத்துங்காரியத்திற்கிடையூறு வருமாகில்

தன்னுடைய வருத்தத்தைப்பாராட்டாமல் கூடியமுயற்சிசெய்து நிறைவேற்றுவான். இவ்வகையோருக்குப்பலதுன்பமுண்டாயிருந்தாலும் அவையுடனே அவர்களைவிட்டு நீங்கிப்போய்விடும்.

ஆதலால், உயிர்க்குத்துணைக்காரணமாகவிருக்கும் முயற்சியினிடத்தில் மனத்தளர்ச்சி செய்யாமல் சாக்கிருதையாயிருக்கவேண்டும்.

## நட்பாராய்தல்.

ஒருவனுடையகுணங்களையும் நடக்கைகளையும்சோதித்தறிந்துபின்புசிநேகஞ்செய்யவேண்டும், அப்படிச்செய்யாமல் அயோக்கியனிடத்துநட்புகொண்டால் அவன்செய்யும்பழிபாவங்களுக்குத்தானுந்துணையாகித்துன்பப்படுவதுமல்லாமல், இசபரங்களில்தான்பெறத்தக்கபயன்கள் யாவையுமிழந்துவிடுவான்.

ஒருவன் மற்றொருவனுடனே சிநேகஞ்செய்யவிரும்பினால் முன்னமே அவனுடைய பிறப்பையும் சுற்றத்தையுஞ் சிநேகர்களையும் அறிந்து அதனால் அவனது குணம் இப்படிக்கொத்ததென்று நிதானித்துப்பின்பு அவனுடனே சிநேகஞ்செய்யவேண்டும்.

நல்லகுலத்திற் பிறந்தவனையும் உலகத்தார்சொல்லும்பழிக்கும் பாபத்திற்குமஞ்சி நடக்கின்றவனையும் இருக்கின்றவனது நட்பைப் பொருள்கொடுத்தாவது வாங்கவேண்டும். ஏனெனில், தனக்குள்ளபகைவர்களுக்குநல்லோருடைய சிநேகம் காவலாகவிருக்குமென்பதினாலேதான். குற்றமுள்ளவர்களுடைய சிநேகமோவெனில், தீமையைத்தருமாதலா லதற்கொன்றைக் கொடுத்தாவது விட்டுவிடவேண்டியது.

தான்செய்தகெடுதிகளைக்குறித்து கண்டித்து இனி அப்படிச்செய்யாமலிருக்கும்படியாக நன்மார்க்கத்தைத்தெரிவிக்கும்வல்லமையுடைய விவேகிகளை முன்னாடி ஆராய்ந்தறிந்துபின்புசிநேகிக்கவேண்டும். அப்படி அறிந்து சிநேகஞ்செய்வதினாலே மேன்மையுண்டாகும்.

அவிவேகியோடு மனங்கலந்து உறவாடுவதைப்பார்க்கிலும்விவேகியோடு பகைசெய்துகொண்டிருப்பதும்நலம். ஏனெனில், அவிவேகியினுடைய உறவு ஆபத்தானகாலத்தில்பகையைவிளைக்குமென்றும், விவேகியினுடையபகை எத்தனைகொடியதாகவிருந்தாலும் துன்பமுண்டாக்கமாட்டாதென்றும், முன்னோர்கள் சொல்லியிருப்பதினாலேதான்.

வறுமையுற்றகாலத்தில் கைவிடுஞ்சிநேகருடனே உறவாடுவது எத்தன்மையதென்னில், மண்குதிரையைநம்பி ஆற்றிலிறங்கிய தன்மைபோலவாம். ஆதலால், இவ்வித அறிவிலாருடனே சிநேகங்கொள்ளாமல் மௌனமாகவிருத்தலே பெரியசெல்வமென்று நீதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது.

சாஸ்திரங்களில்சொல்லிய விதியையும் விலக்கையும் புத்திக்கூர்மையாலறிந்து நடக்கின்ற புலமையோர்களைக் கண்டு அவர்களோடு நட்புகொண்டால் புகழுங்கீர்த்தியுமுண்டாகும்.

இழிகுலத்தோர் - ஈனத்தொழிலோர் - இழிவானநடையுளோர் - இப்படிக்கொத்ததாழ்வானவரோடு பழகுதலால் செடுதிவராவிடினும் பெருமைகுறைந்துவிடும்.

உத்தமனுடையசிநேகம் துவக்கத்தில் சிறியதாகவிருந்தாலும் பின்பு மேன்மேலும் விருத்தியாகும் - மத்தியமனுடைய சிநேகம் அதிகமாகவிருத்தியடையாமற்போனபோதிலும் தகுதியாகவிருக்கும். அதமனுடைய சிநேகம் நிலையாகவிராமல்வரவரதேய்பிறைபோல் குறைந்துபோகும். அதமாதமனுடையசிநேகமோவெனில் குறைவதுமன்றிப் பகையாகமாறித்தீங்குபயக்குமாதலால், ஒருவனைச்சிநேகஞ்செய்வதற்குமுன் அவனுடையகுணகுணங்களையறிந்து பின்புநட்புகொள்ளவேண்டும்.

கரும்பைக்கொழுந்தாடையிலிருர்து தின்றுக்கொண்டுபோனால் வரவரமதுரத்தையதிகமாகக்கொடுக்கும். அதுபோல அறிவுடன் நூல்களைக்கற்றறிந்த விவேகிகளோடுகொண்டவுறவு ஆரம்பத்தில் மிதமாகவிருந்தாலும் பழகுதலால் விருத்தியாகி நன்மைதரும், அக்கரும்பை அடியிலிருந்துதின்றுக்கொண்டுபோனால் அதன்சுவை வரவரகுறைந்துகாணும் அதுபோலநன்மையில்லாத தீயோரோடுகொண்ட உறவு முதலில் அதிக இஷ்டத்தைத்தருமாயினும் வரவர குறைவதுமல்லாமல் தீமையுண்டாக்கும் - இதையுணர்ந்து யுக்தமானசிநேகத்தைத் தேடவேண்டும்.

யானையினதுசுபாவத்தைப்போன்றவிலைமாதருடனேகொள்ளும்நட்பைவிட்டுசுணகத்தின்இருதயத்தைப்போன்றமனமுள்ளநல்லவர்களிடத்திலுறவுசெய்யவேண்டும். அஃதெவ்வாறெனின், யானைதனக்குக்கவளங்கொடுத்துசம்ரக்ஷணைசெய்தபாகனையும்ஒருகாலத்தில்கொன்றுவிடும். அதுபோலவிலைமாதருக்குமனவெறுப்பில்லாமல்மேன்மேலும்திரவியத்தைக்கொடுத்துக்கொ

ண்டுவந்தாலும் அவர்கள் நன்றியாராட்டாமல்சமயத்தில் துன்பத்தைவிளைவிப்பார்கள் ஆதலாலிவ்விதநடக்கையுள்ளவர்கள்தீயோரென்று சொல்லப்படுவார்கள். சுணகத்தைவளர்க்கின்றவன் அதனிடத்து எறிந்தவேலாயுதம் அதன்மீதுபட்டுருவித்தொங்கிக்கொண்டிருந்தாலும், அது தன்வருத்தத்தைநினையாமல் வாலைக்குழைத்துக்கொண்டு எசமானன் சமீபத்தில் வருமேயல்லது தனக்குண்டாகியவருத்தத்தால் மேல்விழுந்து கவ்வாது. இதுபோல நல்லோர்களுக்குக் கொடிதாகிய பிழையைச்செய்தாலும்அவர்கள் கோபங்கொள்ளாமல் முன்பழக்கத்தாலுண்டாகிய விசுவாசத்தைப்பாராட்டி நட்பாகவே நடப்பார்கள். ஆதலால் நல்லோர்களுடைய சிநேகத்தையே விரும்பவேண்டும்.

தலையானசிநேகம் பனைபோலவும், இடையானசிநேகம் தெங்குபோலவும், கடையானசிநேகம் கமுகுபோலவுமிருக்குமென்பதற்குப் பொருளென்னவெனில், பனை முயற்சியில்லாமலே பலனையளிப்பதுபோல உத்தமர்கள் ஒருநாள்கண்டுவசனித்தாலு மதைப்பழமையாக எண்ணிப் பலநன்மைகளைச்செய்வார்களென்பதும், தெங்கு சிலகாலம் சலம்விட்டுக்காப்பாற்றப்பட்ட பின்பு பலனைத்தருவதுபோல மத்தியமர்களுடனே சிலநாள்பழகினாலல்லது அவர்களுடைய சிநேகம் ஊர்ச்சிதப்படாதென்பதும், எக்காலமும் குறைவில்லாமல் சலம்விட்டு காப்பாற்றிவந்தால் பிரயோசனத்தை யளிப்பதும், ஒருநாள் சலம் குறைவுபட்டால் பலத்தைத்தராததுமான கமுகுபோல அதமர்களுடைய பழக்கம் ஒருநாளிடையிட்டாலும் பயன்படாதென்பதுந்தானே.

ஈயினது காலளவுகூட உதவிசெய்யாத ஒருவன் நாயினது கால்விரல்களைப்போல நெருக்கமுற்ற சிநேகனாகவிருந்தாலும் அவனாலொருபலனுமுண்டாகாது. ஆதலால், அச்சிநேகநெருக்கத்தை உதறிவிட்டுப்பண்புடையவர்கள் எவ்வளவுதூரத்திலிருந்தாலும் அவர்களைப்போய்அடுத்தால்பலனுண்டாகும். இதற்குத்திட்டாந்தரமென்னவெனில், புலத்தினாலே கால்வாய்க்கு ஒருபலனுமில்லாதிருந்தாலும் அது தூரத்திலிருக்கும் சலத்தைத் தன்வழியாய்க்கொண்டுவந்து அந்தப்புலத்திற்சேர்த்து அதை விளைவிக்கும்படிச்செய்வதுதான். இதுபோலநல்லோர்களும் உபகாரத்தை விரும்பாமலே நன்மைசெய்வார்கள்.

விவேகிகளோடு கலந்துறவாடுவதே ஒருவனுக்கு உறுதி

யானபலன். அப்படியல்லாது அவிவேகிகளோடு உறவாடுவது எத்தன்மையதென்னில், பாம்புக்குப் பாலூட்டிவளர்த்துச்சிநேகம் பாராட்டிக்கொண்டுவந்தாலும் அதுவிஷத்தைக்கொடுக்கும் தன்சுபாவகுணத்தைவிடாது. இதுபோலவே தீயோருடைய நட்பு தின்மையயக்காமற்போகாது.

உலகத்திலுள்ள யாவரிடத்தும் உறவாயும் இதமாயும் நடக்கின்ற நல்லோர்கள் பிறருக்குத்துன்பம் நேரிட்டகாலத்தில அது தனக்குநேரிட்டதாகக்கருதி அதற்குத்தன்னால்கூடியஉபகாரத்தை மனவஞ்சனையில்லாமற் செய்வார்கள். இத்தன்மையுடையோருக்குப்பிறர் எத்தனையாகக்குற்றஞ்செய்தாலும் அதைதன்கைவிரல் தன்கண்ணில் பட்டதுபோல எண்ணுவார்களேயல்லாமல் குற்றமாக எண்ணார்கள்.

தருமத்தின்வழியையறியவும், குற்றங்களுக்கஞ்சிநடக்கவும், கடினவசனத்திற்குக்கோபியாமல் பொறுமைகொண்டிருக்கவும், கபடமானசொற்களால் மோசஞ்செய்யாதிருக்கவும், தீவினையைக் கொடுக்கின்றவர்களுடைய இணக்கத்தைமறந்துவிடவும், நினைக்கின்றவர்கள்யாரோ அவர்களே பெரியோர்களுடைய சொற்களைக்கேட்டு அவர்களோடு நட்புகொள்ள விரும்பியவர்கள்.

பாலுடனேகூடிய சலத்தை நாமறிந்திருந்து மதைப்பிரிப்பது நம்மால்கூடாததுபோல நல்லவர்களுடனே நட்புகொண்ட சிறியவர்களுடைய அல்பகுணம் வெளிப்படாது.

கடலினிடமாய் ஓடுகின்ற கப்பல்தீதாகிய சுழல்காற்றினுறவால் கெடுதியடையும். இதுபோலநற்குணத்தையுடையபாவியன் தீங்கான சிற்றினஞ்சேருவானாகில் கெடுதியடைவான்.

ஆதலால், ஒருவனை நட்புகொள்ளவிரும்பியவர்கள் முன்னாடி அவர்களுடைய குணகுணங்களை ஆராய்ந்து பின்புநட்புகொள்ளவேண்டும்.

## நட்பில்பிழைபொறுத்தல்.

உறவுகொண்ட ஒருவன் பொல்லாங்கானகாரியத்தைச்செய்து விடுவானாகிலது அவனையல்லாமல் நேரிட்டகுற்றமென்று எண்ணி அதைக்குறித்துவருந்தாமல் பொறுத்துக்கொள்வோர் நல்லோர் என்பது நட்பில் பிழைபொறுத்தலாம்.

ஒருவனை நல்லகுணவானென்று நினைத்து விரும்பி நட்புகொண்டபின்பு அவனிடத்து ஒருபண்பாயினு மில்லாதிருந்தா

னும் ஒருதரம் நட்புகொண்டபடியினாலே அவனைக்கனப்படுத்திக் கொள்ளவேண்டியதேயல்லாமல் அவனது அறியாமையை வெளியிட்டுப் பேசலாகாது. அஃதெப்படியெனில், நெல்லுக்கு உமியும் நீருக்கு நுரையும் புஷ்பத்திற்குஇதழும் அவைகளை வெளிகாட்டாமல் தன்தன்நற்குணத்தால் மறைத்துக்கொண்டிருப்பது போலவாம்.

அணையினாலே கட்டப்பட்டிருக்கும்சலம் அவ்வணையை உடைத்துக்கொண்டு போய்விடுமாகில் அதற்காக சனங்கள்அதனிடத்து பிணங்கிக்கொண்டிருப்பார்களோ? இரார்கள் ஏனெனில், அச்சலம்சகலபிராணிகளுக்கும் சீவாதாரமாயிருக்கிறபடியினாலே அதைப்போகவொட்டாமல் மறுபடி அணைபோட்டுக்கட்டிக்கொள்வார்களல்லவோ ? அதுபோலவே ஒருவனைவருந்தி நட்புகொண்டபின்பு அவன் வெறுக்கும்படியாய்ப் பேசினாலும் பொறுத்துக்கொள்ளவேண்டியதே நட்பாளருக்குக் கடமையாம்.

நட்புகொண்ட ஒருவன் பொறுக்கத்தகாத ஒருகொடிய பொல்லாங்கைச்செய்தாலும் ஒருகால் நட்புகொண்டபடியால தைநாடிப்பொறுக்கவேண்டும். இல்லாவிடில் நட்பு நீடித்திருப்பது கடினம்.

ஒருவன் தனக்குப் பொல்லாங்குசெய்வோனைச் சிநேகனாக வுடைத்தாயிருந்தால் அவன்செய்த பொல்லாங்கைப்பொறுத்து தனக்குள்ளே யடக்கிக்கொள்ளவேண்டுமேயல்லது அதற்காக அவனை விட்டுவிடலாகாது எப்படியெனில், எல்லாப் பொருள்களையும் பஸ்மமாக்கும் அக்கினியைக்கூட அதன்சுவாலையை மிதப்படுத்தி சனங்கள் தங்கள்வீட்டுக்குள் ளடக்கிவைத்துக்கொள்ளுந் தன்மைபோலேதான்.

ஒருவன் தன்கைவிரல் தன்கண்ணிற்பட்டதென்று அதைத்தறித்துவிடுவானோ? அதுபோல ஒருவனும்தன்னிடத்தில்நட்புகொண்டவர்கள் பொல்லாங்கான காரியத்தைச்செய்தானென்று அவர்களை விட்டுவிடலாகாது. விட்டுவிட்டால் உலகம்பழிக்கும். இதற்குத்திட்டாந்தரம், கூடிப்பிரியேலென்று அவ்வை சொல்லிய நீதியைவிட வேறுவேண்டுமோ?

நல்லவர்களையே நல்லவர்கள் சிநேகிக்க வுடன்படுவார்கள். அப்படிச்சிநேகித்தபின்பு காலதேயவர்த்தமானத்தாலவர்களால் தமக்குப்பொல்லாங்குநேரிடுமாகில் அதைத்தமக்குள்ளே யடக்கி

க்கொள்வார்களே யல்லாமல் வெளியிட்டுப்பேசார்கள். ஒரு வேளைதப்பி வெளியிட்டுப் பேசுவார்களாகில் அவர்களுங்குற் றமுள்ளவராவார்கள். ஆதலாலதைமறந்துவிடவேண்டும்.

தன்னாலே காதலிக்கப்பட்டவர்கள்செய்த காரியம் பிரா ணனுக்கு அபாயத்தைக் கொண்டுவரும்படியானதாகவிருந்தா லும் அதைப்பொறுத்துக்கொண்டு அவர்கள்செய்த குற்றத் தை மன்னிக்கவேண்டும். மன்னியாமல் அதைவெளியிட்டால் அச்சேர்க்கைவாசனை தன்னையுந்தொடர்ந்து தீவினைசெய்யுமெ ன்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

ஆதலால் சுகந்தமுள்ள புஷ்பத்தோடுகூடிய இழிவான நாரையும் பெரியோர்களங்கீகரிப்பதுபோல நட்பையுடையவ ர்களாலுண்டாகிய குற்றங்களையும் நட்பாளர் பொறுத்துக்கொ ள்ளவேண்டும்.

## தீ நட்பு.

ஒருவனுக்குவறுமைவந்தகாலத்தில் சிநேகத்தைமறந்துசெல் வம்வந்தபொழுதுபழமைபாராட்டிஉறவுசெய்கின்றவர்கள்முக நட்பாளரோயல்லது ஒருமையானவர்களல்ல - அவர்களை ஒருமை யுள்ளவர்களென்று நம்பினால் தீங்குவிளையும்.

குணமில்லாதவர்களுடையநட்புக்கொருவருமிடங்கொடு க்கலாகாது. ஒருவேளை அகஸ்மாத்தாய் அப்படிக்கொத்தநட்பு நேரிட்டு விருத்தியாகுமாகில் அதினாலே அவர்கள்செய்யுங்கொ டுமைக்குத் தாழ்முட்பட்டு ஆபத்தாகிய துன்பத்தையடைய வேண்டும். ஆதலால் தீநட்புக்கிடங்கொடுக்கலாகாது.

சர்ச்சனராகிய நல்லோருக்குத் தீயோருடைய சகவாசம் பொருந்தாது, ஒருவேளை அபூர்வமாக நேரிட்டிருந்தாலும் அதனால் தீங்குண்டாகுமென்கிறஅச்சத்தால் அவர்கள்பிள்ளைப் பூச்சிபோல ஒட்டியுமொட்டாமலுமிருந்து நீங்கிவிடுவார்கள்.

நல்லோர்களுடையநட்பு பலநன்மையைக்கொடுக்குமெ ன்பதை யுணராத தீயோர் அவர்களோடு ஏன் நட்புகொள்ளவி ரும்புகிறார்களென்றால், அவர்களுக்கு அறிவுசோர்வுபடுங்கா லத்தில் அவர்களுடையபொருளையபகரிப்பதற்குத்தான்.

பிறனாலே பலதரம் பலநன்மைகளைப்பெற்று அதைமறந்து அவனுக்கு நேரிட்ட துன்பத்திற்குத்தானுந்துணைப்படாமல் கெடுதிசெய்வோன், தீநட்பாளரில் தலைமையானவனென்றுசொ ல்லப்படுவான்.

தீநட்பு.

அறிவுடையவன் ஒருவனிடத்துப்பகையைமேற்கொண்டிருந்தாலும் அவனுக்கு ஆபத்துவந்தவிடத்து உதவியைச்செய்வானேயல்லதுகெடுதியைச்செய்யப்பாத்தியப்படான், அறிவிலானுவெனில் மிகுதியானபலனை ஒருவனாலேயடைந்திருந்து மதை நினையாமல் அபகாரத்தைச்செய்ய உடன்படுவான். ஆதலால் அறிவிலாருடைய உறவைப்பார்க்கிலும்அறிவுடையவரது பகையினால் பலனுண்டென்று சொல்லப்படுகின்றது.

மிகுந்த சிநேகநெருக்கத்தினாலே பேதமின்றிவிரும்பிக்கேட்குங்காரியத்தை எளிதில் நிறைவேற்றிக்கொடுக்க இடமுண்டாயிருந்தாலும் திரவியத்தாசையால் அதை மற்றொருவனுக்கு அனுகூலப்படுத்திக்கொடுப்போன், பொருத்தமுள்ள சிநேகனாக விருந்தபோதிலும் அவன்சிநேகத்தை அப்பொழுதேவிட்டு நீங்கியிருக்கவேண்டியதே தருமமென்று சொல்லியிருக்கின்றது.

தொழில்செய்வதினிடத்துப்பகையாகவும் வசிப்பதினிடத்து நட்பாகவுமிருக்கின்றவனது நட்பு நினைவிலேமாத்திரமல்ல - கனவிலுந்துன்பஞ்செய்யுமென்பதற்கு அய்யப்படவேண்டியதில்லை.

தனித்தவிடத்தில்மேல் வீழ்ந்துறவாடிப் பலர்கூடியசபையினிடத்தில் உரிமையில்லாத அன்னியனைப்போலக் குறிப்பித்துக்கொண்டிருப்போனது நட்பை (பிணிக்குமருந்தூட்டி நிவர்த்திசெய்வதுபோல)நிவர்த்திசெய்து விடவேண்டியது.

ஆதலால், நன்மையைத்தராததீயோருடையசேர்க்கையால்விபரீதமுண்டாகுமென்று நினைத்து அத்தீயசகவாசத்தைவிட்டுநீங்கியிருக்கவேண்டும்.

## கூடாநட்பு.

கூடாநட்பென்பது, ஒருவன் தனக்குள்ள பகைமுதலியதை முடித்துக்கொள்வதின்பொருட்டு மற்றொருவனுடனே பற்றில்லாமல் நட்புகொண்டிருப்பதேயாம்.

சிநேகமான ஒருவனுக்கு இக்கட்டுவந்தவிடத்துச்சகாயமாகவிராமல் அவனதுவிரோதிகளோடு சேர்ந்து பகையைவிளைவித்துக்கொண்டிருப்போன், கூடாநட்பினனென்று சொல்லப்பட்டிருக்கின்றான்.

பலகெட்டகாரியங்களையும்விட்டு நீங்கியிருப்பதின்பொருட்டாகவல்லவா நீதிநூல்களையோதியுணரவேண்டுமென்பது? அப்படியுணர்ந்தும் கெடுதியையுடையவர்களாகவிருந்தால் ஓதி

யநூலால் பயன்யாது, ஒன்றுமில்லையல்லவா? ஆதலால்அப்படிக்கொத்தவர்களுடைய நட்புக்கிடங்கொடுக்கலாகாது.

ஒருவன்சிநேகனாகியமற்றொருவனைக்கண்டபொழுதேமுகமலர்ச்சியோடுநகைசெய்து மதுரமான நல்லவசனங்களை வசனித்தாலும் அவன் உள்ளன்பிலாதவனாகக் காணப்படுவானாகில் கூடாநட்பினனென்றுகருதி அவனைவிட்டு நீங்கியிருக்கவேண்டும்.

மனதினிடத்துப் பகையையுடையவன் அதைச்சாதித்துக்கொள்வதின்பொருட்டு தன்மனக்கவட்டை வெளிகாட்டாமல் மிகவுமுரியசிநேகனைப்போல அபினயித்துக்கொண் டிருப்பானாகில் அவன்நயவஞ்சகனேயல்லது மெய்யானசிநேகனல்ல.

சிநேகத்திற்கு உரித்தல்லாத பகைவன் சிநேகனைப்போல உறவாடினாலும் உறவினனாகான். அவனைநம்பியொருவன்தனக்குள்ள பலமர்மங்களையுஞ்சொல்லி அவனது ஆலோசனையின்படி நடக்கவுடன்பட்டால் முடிவில் துன்பப்படவேண்டியிருக்கும். அஃதெப்படியெனில், வில்லானது வணங்குமாயினும் அதுகுறித்தவஸ்துவிற்குத் தீங்கையுண்டாக்கும். அதுபோல உறவாகநடக்கின்ற பகைவரிடத்திருந்துபிறக்குஞ்சொற்கள் மிகவும் வணக்கமுள்ளதாகவிருந்தாலும் அவர்கள் குறித்தகாரியத்திற்குத்தகுந்ததாகவிருக்குமேயல்லது நன்மையைத்தருமென்று ஒருபோதும் நினைக்கலாகாது.

பகைவன்தனதுதளர்ச்சியைக்காட்டித்தொழுதாலும் அழுதாலும் அதற்கிரங்கி அவனுக்கிடங்கொடுக்கலாகாது. ஏனெனில், அவன் தொழுவதுபோல கைகுவித்தாலும் அதற்குள் ஓராயுதம் மறைந்திருக்குமென்றுபெரியோர்கள்சொல்லியிருக்கிறார்களென்பதினாலேதான்.

பகையையுடைய ஒருவன் தான் யதார்த்தமானவனென்று பிறன்மதிக்கும்படியாகச் சிலமதுரவசனங்களைக்கொண்டு பிரமிக்கச்செய்தாலும் அவனிடத்துநம்பிக்கைவைக்கலாகாது. வைத்தால் அவன் தனதுதுற்குணங்களை அப்பொழுதே வெளிகாட்டாவிட்டாலும் சமயம்வந்தபொழுதுகாட்டுவான். அப்பொழுது வியசனப்படவேண்டியிருக்கும்.

பகைவரிடத்து சிலவேளை நட்புகொள்ளும்படியாக நேரிட்டபொழுது அக்காலத்தைநோக்கிமனதினிடத்துப் பற்றில்லாமல் முகத்தால்மாத்திரம் நட்புசெய்து கழித்துவிடவேண்டுமென்பதுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

நிலையில்லாத அவிவேகிகளோடுகொண்டநட்பு நாளுக்கு நாள் விருத்தியடைவதுபோலக்காணப்படுமாயினும், சடுதியி லிடையிட்டுக்கெடுதியடைவதுமல்லாமல், கீர்த்திக்கும்கௌரவத்திற்கும் பழுதையுண்டாக்கும். அஃதெப்படியெனில், வைக்கோலிற்பற்றிக்கொண்ட தீவிருத்தியடைவதுபோலத்தோற்றினும் உடனே அணைந்துபோவதுபோலேதான்.

அசாத்தியமானகாரியத்தை முடிக்க முயற்சிசெய்கின்றவனும், எளிதில் நடத்திக்கொள்ளுங்காரியத்தில் சிரத்தையில்லாமல்விட்டுவிடுகின்றவனும் ஆகிய இவ்விருவரும்அறிவிலாரென்பதற்கையமுண்டோ ! இவர்களோடு உறவுசெய்தால் துன்பப்படவேண்டியதேயாம்.

நல்லோர்களுடைய நேசத்தைவிட்டு அறிவிலாத தீயோருடனே நட்புகொள்ளவிரும்புவது எத்தன்மையதென்னில், பசுவின் நெய்யோடிடப்பட்ட பொசிப்பைவிட்டு வேப்பெண்ணெயோடுகூடிய பொசிப்பைவிரும்புவதுபோலாம்.

பார்வைக்கு அழகான ரூபத்தையுடைய ஒருவன்,மனதில் ஒப்புறவில்லாதவனாக விருப்பானாகில் அவனதுசிநேகம் சுண்டக்காய்ந்தபாலில் நீரைக்கலந்ததுபோலிருக்கும் அஃதெப்படியெனில், மதுரமான பாலில் சலத்தைக்கலந்தாலும் பாலின் சுவைமாத்திரங்குறைந்து நிறங்குறையாதிருப்பதுபோல குணமில்லாத அறிவீனன் எவ்வளவுரூபவானாகவிருந்தாலும் அவனதுசிநேகம்நேத்திரோற்சவமாத்திரமிருக்குமேயல்லதுஅதனால் எவ்வளவும் பிரயோசனமிராது.

அறிவினையுடைய நல்லோர்கள் புல்லறிவாளரோடு நட்புகொள்வார்களாகில் அதுவிரியன்பாம்போடு நாகம்புணர்ந்தாற்போலவாம். அஃதெப்படியெனில், விரியன்வயிற்றில் நாகத்தின் பிந்துபாய்ந்து கருப்பந்தரித்துவிருத்தியாகுமாகில் அந்நாகத்தின் ஆயுள் நாளுக்குநாள்தேய்ந்து அதுசீர்ணகதி யடையுமென்பதுபோல அறிவிலாருடன்கொண்ட சிநேகமும் விருத்தியாகுமாகில் நல்லவர்களுக்குள்ள எல்லாநன்மைகளும் நாளுக்குநாள் கெடுதியடையுமென்று நீதிகளிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆதலால், கூடாநட்பாகிய கெட்டச்சகவாசத்தை விஷமாகநினைத்து அதற்குத்தூரமாகி நல்லவர்களைக்கண்டு சிநேகிக்கவேண்டும்.

கள்ளினிடத்து விருப்பங்கொண்டதையுண்டு திரிகின்றவனுடையமனதில் அச்சமென்பதெவ்வளவுமிராதென்றும், அவனுடைய முன்னோர்களடைந்திருந்த கீர்த்திமுதலாகியது அவனிடத்திலுங்கொஞ்சஞ்சேர்ந்திருந்தால்அதுவுங்கெட்டு அவனும்இழிவுபெறுவானென்றும், முன்னூற்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

சுபாவமான விவேகத்தைத் தன்னியல்பிலிருக்கவொட்டாமற்கெடுப்பதற்கேதுவாகிய கள்ளை உணர்வின்றியுண்டு களித்திருப்பவனுக்குப்புத்தி எவ்வளவுதெளிவுள்ளதாக விருந்தாலும் அவனைச்சான்றோர்கள் அறிவிலாமிருகங்களுக்குச் சரியாய்மதிப்பார்களேயல்லது குணவானாக மதியார்கள்.

கள்ளையுண்கிறத்தினாலே தமக்கு மெய்மறதியுந்தமதுபுகழுக்குப்பழுதுமுண்டாகுமென்று அறிந்திருந்தும், அறிவிலார்போல அக்கள்ளைவிலைகொடுத்துவாங்கியுண்டு மயங்கிக்கிடப்பவர்களை உலகம்பழியாதோ?

கள்ளையுண்டேப்பமிடுகிறவனுக்குண்டாகுங் கெடுதியென்னவெனில், மனோவாக்காயங்களாகிய மூன்றுஞ் சுவாதீனமில்லாமற்கெடுதியடைவது மாத்திரமல்ல, இகபரங்களிலுள்ள மற்றெவ்விதநன்மையும் அவனுக்குக்கிடையாது. ஐயோ! இவன் கதி இன்னதென்றறிந்திலேம்.

கள்ளினதுசுபாவம் அதையுண்கிறவனது அறிவைத்தெளிவில்லாமலுறக்கமுறச்செய்யுமாதலால், அவனுயிருடனிருந்தாலும்இறந்தவனுக்குச்சமானமென்றேசொல்லப்படுவான்.

இரகசியப்பொருளைப் பிறருக்குச்சொல்லாமல் ஒருவன் தன்மனதினிடத்து ஒளித்துவைத்திருந்தாலும் அவன்கள்ளையருந்துவோனாக விருப்பானாகில் அதன்மயக்கத்தால் அவன் மனதிலொளித்த இரகசியப்பொருளையும் வெளியிட்டுச்சொல்வானென்றும்,அதனால் அவனடையவேண்டிய எல்லாப்பிரயோசனங்களையு மிழந்துவிடுவானென்றும், சொல்லப்பட்டிருக்கின்றதற்குத்திட்டாந்தரமென்னவெனில்,சாராயத்தைவார்த்துப்பூராயத்தைக்கேளென்றுசொல்லும் பழமொழிதான்.

கள்ளைமறைவாகவிருந்துகுடிக்கவிரும்புகின்றதுஒருவருமறியாதிருப்பதின்பொருட்டாகவல்லவா? மறைந்துண்டபின்புஅது அவனது சுபாவத்தைமறக்கும்படிச்செய்யாதோ? அப்பொழுது பிறர்கண்டுநகையார்களோ? இதனாலிழிவடையவேண்

டியிருக்குமென்று தோன்றுதோ ? இதற்கு உலகம்பழியாமற் புகழுமோ ?

ஒருவன்கள்ளையுண்டிருந்தும் அதையுண்டதில்லையென்று சாதித்துச்சொல்லும்வசனம் மாறுவதற்குமுன்னமே மூன்னுண்டிருந்தகள்ளினதுமயக்கந்தலைக்கேறி அவன்புத்திக்குச்சோர்வையுண்டாக்கி அவன் சாதித்தவசனத்தைப் பொய்யாக்கிவிடும்போது வெட்கப்படவேண்டி யிருக்குமென் றுணராமலிருப்பதற்கு அவிவேகமே காரணமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆதலால், உடலுலுங்கி நடுக்கமெடுப்பதற்கும், கண்சிவப்பதற்கும், இரோமங்கூச்செறிவதற்கும், வாய்நுரைத்துவெளுப்பதற்கும்,சொற்குளிறுதற்கும்,மெய்மறப்பதற்கும்,முகம்வேர்ப்பதற்கும், தலைதிரும்புவதற்கும், ஆள்சுழன்றுவீழ்ந்து புரள்வதற்கும், சற்றுஅழுவதற்கும், உடனேநகைப்பதற்கும், நினைப்பதொன்றும்சொல்வதொன்றுமாய்மாறுவதற்கும்,மருண்டுவிழிப்பதற்கும், வாயில்வந்தபடி பிதற்றுவதற்கும், கூத்தாடுவதற்கும், கொக்கரிப்பதற்கும், இன்னும்பல இழிவான விகாரச்செய்கைகளுக்குங் காரணமாயிருக்குங் கள்ளுண்டலை நீக்கவேண்டும்.

## சூது.

சூதாடுதல் மிகவுங்கொடியது. அச்சூதால்வரும்பொருளினிடத்து இச்சைவைப்பது அதிலுங்கொடியது. ஆதலால்அதையொருகாலும் நினைக்கலாகாது.

ஒருவன் சூதின்னதென்று அறியாதவனாகவிருந்தாலும், அவன்சூதாடுமிடங்களிற்றங்கியிருப்பானாகில் அவ்வழியால்வரும்பழிபாவங்களுக்கு அவனுமுடன்படவேண்டி யிருக்குமாதலால்அவனுக்கு உடனே தீங்குவரும்.

சூதாடுதலில் ஒருவனைச்சயிக்கத்தக்க வல்லமையுடையவனாகவிருந்தாலும் தோல்வையடைவதுசித்தமே, அதில்வெற்றி பெற்று பிரயோசனத்தை யடைவதில்லையோவென்றால், அந்த பிரயோசனமும் இரையால்மறைந்த தூண்டிலினிரும்பை மீன் விழுங்கியதுபோலவேயென்று சரியான உவமையால் உணர்க்கப்பட்டிருக்கின்றது.

சூதாடுதலாலுண்டாகும் பிரயோசனங் கொஞ்சமாகவிருக்கினும் அது இன்னும்பெறலாமென்கிற விருப்பத்தையுண்

டாக்கின்றமையால், பின்பு நேரிடும்நஷ்டம் மிகவுமதிகமாகவி ருக்கும். ஆதலால், முதலிலுண்டாகியகொஞ்சப்பிரயோசனமு ம்பிரயோசனமல்லவென்பது நன்றாய்விளங்குவதுமன்றி அத் தன்மையுடைய சூதாடலைவிரும்பியவர்கட்கு அறமுமின்பமு மில்லையென்பதும் பிரகாசமாகத்தோன்றுமற்போகாது.

உருள்கின்றபாச்சிகையினால்வரும் பொருள் எவ்வளவாக விருக்குமோ! தெரியாது. ஆனால் அதனால் போகும்பொருள் அரசனுடைய பொக்கிசத்திலிருக்கும் திரவியத்திற்கு அதிக மாகவே யிருக்குமென்பது மெய்யேயாம்.

பலதுன்பங்களையுமுண்டாக்கிப் புகழையழிக்கின்ற சூதா டுதலைப்போல வறுமையைத்தருகின்றது. வேறொன்றில்லையெ னக்கருதவேண்டும்.

சூதாடுதலையும் அதனிடத்தையும் அதற்குவேண்டுந்தொ ழிலையும் மேற்கொண்டவர்கள் ஒருகால் உயிருடனிருந்தும், இல்லாதவர்களாவார்கள். அஃதெப்படியெனில். நளமகாராசன் பாண்டவர்கள் - இவர்கள் சூதாடியதினால் சகலமேன்மையையு மிழந்து வனவாசஞ்செய்து வறுமையடைந்ததினாலே இருந் துமில்லாதவர்களானார்களென்பதுபோலேதான்.

செல்வத்தையழித்து வறுமையைக்கொடுக்கும் சூதாடலை விரும்பி வெற்றிதோற்பறியாமல் அதிலேஉழன்றுதிரிகின்றவர் கள், இகத்தில்பெருமையையும் சவுக்கியத்தையுமிழப்பார்களெ ன்பதுந்தவிர, பொய் களவுமுதலாகிய பாபகிருத்தியங்களைக் குறித்து ஏவப்படுகையால் மறுமையில் நரகத்துன்பத்திற்குப் பாத்திரர்களாவார்களெனவுஞ்சொல்லவேண்டுதலாகின்றது.

ஆதலால், சூதென்னுங்கெட்டசெய்கையைவிட்டுப் பகவா னிடத்து நம்பிக்கைவைத்து நடப்போருக்குஎல்லாப்பிரயோச னங்களும் எளிதில்கைகூடுமென்று அறிந்துநடக்கவேண்டும்.

## தீவினையச்சம்.

துடர்ச்சியாய்பாபத்தைச்செய்துகொண்டுவரும்பாபி மே ன்மேலும் பாபத்தையேசெய்துகொண்டு வருவானே யல்லது வெறுமேயிரான். ஆனால் பாவங்களுக்கஞ்சி நடப்போர் யா ரோ அவர்களே சர்வோத்தமரெனப்படுவார்கள்.

அக்கினி எல்லாவஸ்துக்களையுந் தகிக்கும் சுபாவத்தையு டைத்தாயிருந்தாலும் தன்னைச்சேராதவஸ்துக்களைத்துடர்ந்து தகிக்கமாட்டாது. தீவினையோவென்றால் அப்படியல்ல. ஒருவ

ன் தனதின்பத்தின்பொருட்டுசெய்யும் தீவினையாகிய அக்கினி அவனை எப்பொழுதும் த்டர்ந்துகொண்டிருந்து வேதனைசெய்யும். ஆதலால் அக்கினியைப்பார்க்கிலும் கொடியதுதீவினையென்றுசொல்லப் பட்டிருக்கின்றது.

ஒருவன் இடைவிடாதபடித்துன்பத்திற்கேதுவாகிய தீவினையைச்செய்துகொண்டிருந்தாலும்பெரியோர்கள்அதற்கஞ்சியதனைப் பொறுத்துக்கொண் டிருப்பார்களாதலால் அவர்களுடைய அறிவும் நெறியும் மிகவும் சிறந்ததாகக்கொள்ளப்படும்.

பிறருக்குத்துன்பத்தைச்செய்துகொண்டிருப்பவனை அக்கொடியசெய்கையே முடிவில் நாசமடையச்செய்யும். மேலும் அவனாலே யேதேனும் உபகாரஞ் செய்யப்பட்டிருந்தாலும் அதுவும் அவனுக்குச்சமயத்தி லுதவாமற்போய்விடும்.

பொருளில்லாமைபற்றி அதுகிடைக்கும்படியாகப்பிறருக்குத்துன்பத்தைச்செய்துயிர்வாழ்வோன் பிறவிதோறும் தரித்திரத்தையடைந்து துன்பப்படுவான். ஏனெனில் கெடுவான் கேடுநினைப்பானென்று சொல்லியபழமொழி பிரமாணமாகவிருக்கின்றதினாலேதான்.

துன்பத்திற்கேதுவாகிய செய்கைகளைச்செய்கிறத்தினாலேயுண்டாகிய கொடியபாபம் துடர்ந்துவருத்தப்படுத்துமென்கிற எண்ணத்தையுடைய நல்லோர்கள் பிறருக்குத்துன்பத்தைச்செய்ய உடன்படார்கள்.

மிகவுங்கொடியவரான பகைவரிடத்திருந்துதப்பிப்பிழைக்க ஒருபாயமுண்டாயிருக்கலாமானாலும் பாபமான கொடியசெய்கையால்வருந் துன்பத்திற்குத்தப்பிப்பிழைப்பது கூடாதென்றும், அது பிறவிதோறும் பின்சென்று வருத்தப்படுத்துமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஒருவனது உருவத்தின் சாயையென்னும் நிழல் காலைப்பொழுதிலும் மாலைப்பொழுதிலும் அதிகநீட்சியாய்க்காணப்பட்டாலும் அது உச்சிப்பொழுதில் அவனது காலடியில்வந்துசேரும். அதுபோல பிறருக்குச்செய்ததீவினை அப்பொழுது சவுக்கியம்போலக்காணப்பட்டாலும் பின்னாலே அவனைத்துடர்ந்துநின்றுகெடுக்கும்.

பாபம்வந்தணுகாமலிருக்கும்படிக்காத்துக்கொள்ளவிருப்பமுள்ளவன் துன்பத்தைத்தருவதாகிய தீவினையை பிறரிடத்துச்செய்ய வுடன்படாமலிருக்கவேண்டும்.

பாபஞ்செய்யின் இருமையிலுஞ் சுகத்தையடைவதில்லையென்று அறிந்த நல்லோர்கள் துர்மார்க்கவழியிற்சென்றுபிறருக்குத் தீவினையைச்செய்ய வுடன்படார்கள்.

ஆதலால், தீவினையென்பதுபலநற்கருமங்களையுங்கெடுக்கத் தக்கதென்றுணர்ந்துஅதற்கஞ்சித்தூரமாகவிருக்கவேண்டும்.

## உபகாரம்.

தெய்வலோகத்தில் சுகசுகமுமுளதென்பதினால் அவ்விடத்தில் இரப்போருங்கொடுப்போருமில்லை. அதைப்பற்றி அவ்வுலகத்தில் உபகாரமென்பதுமில்லை. இவ்வுலகத்திலோவென்றால், இரப்போருங்கொடுப்போருமுண்டாயிருக்கின்றமையால் உபகாரஞ்செய்வதற்கிடமுண்டென்றும், உபகாரத்தைப் பார்க்கிலும்சிறந்தசெல்வம் வேறொன்றுமில்லையென்றும், சொல்லப்படுகையால்தெய்வலோகத்தைப்பார்க்கிலும் இவ்வுலகமே சிறந்ததென்று கூறப்பட்டிருக்கின்றது.

நல்லோர்கள் பிரதியுபகாரத்தை விரும்பாமலே உபகாரஞ்செய்வார்களென்பதற்கு நிதர்சனமென்னவெனில், உலகத்தாராலே ஒருதவியும்பெறாதமேகங்கள்கடல்நீரைத்தற்செயலாய்கொண்டுவந்துபெய்து உயிர்களை ரக்ஷிப்பதுவேயாம்.

உலகநடையை அனுசரித்துப்பலருக்குமுபகாரஞ்செய்பவன் இறந்தாலும் பூமியினிடத்து உயிருடன் வாழ்ந்திருப்பானென்றும், அவ்வித வுபகாரத்தைச்செய்யாதவன் எத்தனைகாலம் உயிருடனிருந்தாலும் செத்தப்பிணத்தோ டொப்பாவானென்றும் சொல்லியதற்குப்பொருளென்னவெனில், முன்னோர்களினது நீதிநூலின்பொருளையுணர்ந்து அவ்வழிபாட்டுக்கு மாறுபாடில்லாமல் உபகாரத்தைச்செய்து நடப்பவன் அறிவுடையவனென்றும் மனிதச்சனனமெடுத்தும் உயிரிற்குரிய அறிவும் அதற்குத்தக்கசெய்கையுமில்லாவிடின் அவன்அறிவிலானென்றும் ஆதலால் உயிரிலானென்றும் குறிப்பித்திருப்பதுவேயாம்.

உபகாரிகளிடத்துண்டாகியசெல்வம் பலருக்கு முபயோகமாக விருக்குமென்பதற்குத் திட்டாந்தரமென்னவெனில், ஊருக்குள்ளிருக்கும் குளத்துநீர் பலருக்கும் உதவியாகவிருப்பதுபோலவும் அவ்வூர்மத்தியையிலிருக்கும் மாமரம் தனக்குள்ள இலை காய் கனிமுதலியதுகளை பிறருக்குத்தருவதுபோலவுமாம்.

உபகாரம்.

உதவிசெய்வதே நலமென்றுணர்ந்திருக்கும் புத்திமான் தனக்குத்தரித்திரம்வந்தகாலத்திலும் அவ்வுதவிசெய்யும்நெறியைமறந்துதளரவிடமாட்டான் ஆனால் உபகாரஞ்செய்வதற்கிடமில்லாதவிஷயத்தில் தான்சனனமெடுத்தது நிஷ்பலமென்று வியசனப்படுவான்.

உபகாரத்தின்பொருட்டுத் தன்னைப் பிறரிடத்துவிற்பது கூடாதகாரியமானாலும், அது புகழையுண்டாக்கின்றபடியால் அப்படிவிலைப்படுவதினாலேயுங்குற்றமில்லையென்று பெரியோருரைத்திருக்கிறார்களென்பதற்கு அரிச்சந்திரனுடைய சரித்திரமே நிதர்சனமாயிருக்கின்றது.

கீர்த்திபெற்றுவாழ்வதற்குக் கல்வியாண்மைமுதலாகியகாரணங்கள்பலவுண்டாயிருந்தாலும்அவைகளைப்பார்க்கிலும்உபகாரத்தால்வருவதே சிறந்தபுகழென்றும், அப்புகழ் நெடுங்காலம் நிலைபெற்றிருக்குமென்றுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது.

உலகத்தில் எப்பொழுதும் அழிவில்லாமல்புகழுடம்பினால்நிலைபெற்றிருப்பதற்கு உபகாரமே முக்கியகாரணமாயிருக்கின்றதாதலால், மானிடசொரூபத்தைப்பெற்ற யாவரும் உபகாரஞ்செய்வதில் மனத்தளர்ச்சிசெய்யலாகாது.

உபகாரியாகியகுணவானானவன் இகத்திலும் பரத்திலும்எக்காலத்தில் வாசஞ்செய்வானென்பதற்குப் பொருளென்னவெனில், அவன்தான்செய்த தர்மத்தின்பயனால் சொர்க்கானுபவம் பெற்று மகிழ்ந்திருக்குங்காலத்தில் அவனதுகீர்த்தி யுலகத்தில் நிலைபெற்றிருக்குமென்பதுதான்.

பூமியினிடத்திலெடுக்கப்படுஞ்சனனங்களில் மனிதச்சன்மஞ்சிறந்தது. அந்தச்சனனமெடுத்தபின் உபகாரியென்று பெயரெடுப்பது அதிலுஞ்சிறந்தது. அப்படிக்கில்லாத சன்னம்மிருகசனனத்திலுந்தாழ்வானது ஏனெனில் மிருகமும்வளர்ப்பவர்களுக்கு உதவிசெய்வதினாலேதான்.

ஆதலால், ஒப்புரவறிந்துஉபகாரத்தைச்செய்துபுகழடையவேண்டும்.

## ஈகை.

தமக்குள்ள செல்வத்திற்குத்தக்கபடி இரப்போருக்கில்லையென்று சொல்லாமல் கொடுப்பதையே ஆபரணமாகக்கொண்டவரிடத்து அச்செல்வம் பெருக்கமுற்றிருக்கும்.

ஒருவன் நன்மார்க்கத்திற்பிரயாசப்பட்டுச்சம்பாதித்ததிரவியத்திலெவ்வளவாகிலும் இரப்பவர்களின்குறிப்பறிந்துகொடு

த்துத்தானுஞ்சுகத்தையனுபவித்திருப்பது அவனுக்குச்சுகசீவனமாம். அப்படியல்லாமல் திரவியத்தைத்தேடித் தானுமனுபவியாமல் எளியவருக்குங்கொடாமல் புதைத்துவைத்துக்காப்பாற்றுவதினால் அவனுக்குப்பயனில்லையாகிலும், பொன்காத்தபூதமென்றுலகமிகழும்பயன்மாத்திரமுண்டாயிருக்கலாம்.

அதிதிமுதலியோர் தங்கள்வறுமையாலிரந்து கேட்கினும் உபகாரஞ்செய்யாதவனுடைய திரவியம் எவ்வளவுதிரளாகவிருந்தாலும் பயனில்லாமற்கெடும். உபகாரத்திற் செலவுசெய்தால்அது விருத்தியாகிறதுமல்லாமல் கீர்த்தியை யுண்டாக்கும்.

கிடைத்தபொருளில் நாலிலொருபாகம் தருமகயிங்கரியத்தில் செலவுசெய்யவேண்டுமென்று முன்னோர்கள் சொல்லியிருக்கின்றமையால், தனக்குண்டாகிய குறைவைநினையாமல் பிறருக்குக்கொடுப்பதே சிறந்தகொடையாம்.

செல்வத்தையுடையவொருவனிடத்தில் ஒருதரித்திரன்வந்தடுத்துத்தனதில்லாமையைச்சொல்லி இரந்துகேட்பானாகில் அவனது துயரத்தைநீக்காமல் தன்னைப்போலொத்தபாக்கியவான்களுக்குக்கொடுத்துத் தானுமுண்டு களித்திருப்பவனுடைய செல்வம் அரியதவஞ்செய்து பெற்றதாகவிருந்தாலும் இரப்போருக்குதவாமையால்நிலையில்லாமலழிந்துவிடும். ஆதலால் தாதிருத்துவமென்னுங்கொடையே உத்தமகுணமாம்.

திரவியமின்மையால் ஒருவன் புல்லமுதுபடியைக்கொண்டுகாலங்கழிப்பவனாகவிருந்தாலும், தானுண்ணும்போதுவந்த அதிதிக்குத்தானுண்ணுஞ்சாதத்தில் கிஞ்சித்துபாகித்துக்கொடுத்துண்ணவேண்டும். அப்படிக்கொடாமலுண்போனை பிற்காலத்தில் இட்டுண்ணாதபாவியென்று உலகம்பழிக்கும்.

வறுமையிற்றுன்பப்படுவோருக்கு உபகாரஞ்செய்ய உடன்பட்டவர்களை உலகம்புகழும். உண்டாயிருந்தபொழுது ஒருவருக்குமுதவாமல் வறுமைவந்தகாலத்தில் முன்னமே உபகாரஞ்செய்யாமற்போனேனேயென்கிற அநுதாபமுற்றவர்களை உலகம்பழிக்கும்.

தனக்குந்தன்சுற்றத்தாருக்குமுதவுமென்றெண்ணி தனக்குள்ளதிரவியத்தைப் பிறருக்கீயாமல் பூமியினிடத்துப்பத்திரப்படுத்திவைக்கும் புல்லறிவாளர்களின் விவேகத்தின்தன்மையைக்கண்டு பூமிதேவி நகைசெய்வாளென்று சொல்லவேண்டியதேயில்லை. ஏனெனில் பூமியினிடத்து வைத்தபொருளை அனுப

வியாமல் இறந்தவர்களெத்தனைபெயர் என்றுசொல்லக்கூடும்?

தானுண்டதும் ஒருவருக்குக்கொடுத்ததுமாத்திரமேதன் பொருளென்றும், உபகாரத்திற்கொடுத்த அப்பொருள் மறுமைக்குத்துணையாமென்றும், அப்படிஉபகாரஞ்செய்யாமல்காப்பாற்றிவைத்தபொருள் முடிவில் தனக்குதவாமற்போகுமென்றும், முன்னோர்கள் சொல்லியிருக்கின்றார்கள்.

நூற்றிலொருவன் சூரனென்றும், ஆயிரத்திலொருவன்பண்டிதனென்றும், லக்ஷத்திலொருவன் சபையில் பிரசங்கிக்கத்தக்கவாக்குடையவனென்றும், தாதாவானவன் உண்டோ இல்லையோவென்றும், சொல்லியதில் பொருளென்னவெனில், தாதிருத்துவமே எல்லாவற்றிலும் சிறந்தகுணமென்பதாம்.

பேரிகையின்தொனி யோசனைதூரத்திலும், மேகத்தின்கர்ச்சிப்பு பனிரண்டு யோசனைதூரத்திலும், தாதாவானவனுடையகீர்த்தி எவ்விடத்துங் கேட்குமென்றுசொல்லியிருக்கின்றது.

தாதிருத்துவம், இன்சொலுரைத்தல், மனத்தயிரியம், பகுத்தறியும்அறிவு, ஆகிய இக்குணங்கள் அவரவர்களுக்கு சுவபாவமாக வுண்டாகவேண்டுமேயல்லாமல் ஒருவராலே கற்பிக்கப்பட்டகுணங்களல்லவென்றுசிறப்பிக்கப்பட்டிருக்கின்றன.

இறந்துபோகவேண்டியநாள் இன்னந்தூரமாகவிருக்கிறதென்றும், ஆதலால் தருமத்தைப்பின்னாலே செய்வோமென்றும், ஆலசியமாகவிராமல் உடனே தருமத்தைசெய்யவேண்டும். ஏனெனில், நமதுஆயுளும் பொருளும் நாளைக்கிருப்பது நிசமல்ல.

பலருக்குமுபகாரஞ்செய்பவர்களுடைய செல்வம் படிமுதலாய் முளைத்துக்காய்த்துப்பலனையளிக்கும் பனைமரத்தைப்போலவிளங்கியிருக்கும். உபகாரஞ் செய்யாதவர்களுடைய செல்வம் எவ்வளவுமிகுதியாகவிருந்தாலும் சுடுகாட்டுக்குள்வாழும் ஆண்பனையைப்போலிருக்குமேயல்லது வேறுபிரயோசனத்தைக்கொடாது.

கீர்த்திபெறவேண்டுமென்றாலும், மறுமைக்குத்துணையாக்விருக்குமென்றாலும், கேட்டோர்களுடைய முகத்திற்கஞ்சியானாலும், நல்வழியிற்சம்பாதித்தபொருளைக்கூடியமட்டிலும் உபகாரமாகச்செலவுசெய்கிறவர்கள் நல்லோர்களாலேகீர்த்திபெற்றுவாழ்வார்கள்.

ஆதலால், யாவரும் உபகாரமுதலிய நற்கருமங்களிற்செ

னுத்தப்படுந் தாதிருத்துவமென்னுஞ் சிறந்தகுணத்தைக்கைக்கொண்டு கீர்த்தியடையவேண்டும்

## இனியவை கூறல்.

ஒருவன் பிறனிடத்தில் வஞ்சனையில்லாமல் அன்புடன் இன்பமாயும் இதமாயுமிருக்கின்ற வார்த்தைகளைப்பேசி அவனைச் சந்தோஷிப்படுத்துவதே இனியவைகூறலெனப்படும்.

மனமகிழும்படியாக ஒருவனுக்குவேண்டிய திரவியத்தைக்கொடுப்பதைப்பார்க்கிலும் அவனைக்கண்டமாத்திரத்தில் முகமலர்ந்து இனியசொற்களால் வரவழைத்து உபசரிப்பதைவிட மிகுதியானநன்மை வேறொன்றுமில்லை.

ஒருவனைத்தூரத்தில்கண்டபொழுது முகமலர்ச்சியோடுமனமுவந்துபார்த்து அப்படியே சமீபத்தில்வந்தவுடனே மனமும் வாக்கும் வேறுபடாமல் விகிதமாய் வரவழைப்பதைப்பார்க்கிலும் இனிமை வேறுவேண்டியதில்லை.

எல்லவருடனேயும் அன்போடு வசனித்துக்கொண்டிருப்பவனுக்கு உலகத்தார் நட்பாகி வேண்டியுதவியைச்செய்வார்களாதலால், அவனைத் தரித்திரம்நெருங்குவதற்கு அஞ்சும்.

பெரியவர்களிடத்து வணக்கமாகவும், மற்றெல்லோரிடத்தும்இதமாகவும், அன்புடன்வசனித்துபசரிப்பவனுக்கு இந்தக்குணமே சிறந்த ஆபரணமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்குமாதலால்அவனுக்கிதைவிட வேறுபூஷணம்வேண்டுவதில்லை. இக்குணங்களில்லாதவர்கள் விலையுயர்ந்த இரத்தினஆபரணங்களைத்தரித்துக்கொண்டிருந்தாலும்மண்ணினாற்செய்த பிரதிமைக்குமேற்சோடித்த ஆபரணங்களைப்போ லிருக்குமேயல்லது அழகுபொருந்தாது.

பிறருக்கு நன்மையைத்தரு மினியசொற்களின்னவையென்று ஆராய்ச்சிசெய்து அவ்வசனங்களையேசொல்லுகின்றவனுக்குப்பாபங்குறைந்து தருமம்மேலிட்டுவளரும். ஆதலால், அவன் இம்மையில் சுகத்தையும், மறுமையில் மோக்ஷத்தையும், அடைவான்.

இனியசொற்களால் பலநன்மையுமுண்டாகுமென்று தெரிந்திருந்தும், அதைக்கவனியாமல் கடுமையானசொற்களைச்சொல்லவிரும்புவோன் மூர்க்கனெனப்படுவதுமன்றிப்பகைக்கும் நகைக்கும் பாத்திரனுவான்.

நன்மையைத்தரும் இனியவசனங்கள் அனந்தமுண்டாயி

ருக்க அவைகளைவிட்டுத்தீமைகளைத்தருங்கொடுமையானசொற்களைச்சொல்ல விரும்புவது எத்தன்மையதாகவிருக்கிறதென்றால், புசிப்பதற்கு மதுரமான நல்லகனிவர்க்கங்களிருக்க அவைகளைவிரும்பாமல் எட்டிக்கனியைப் புசிக்கவிரும்பியதுபோலவாம்.

ஆதலால், நல்வசனத்தைவசனிக்கவும், கெட்டவசனங்களை நினையாதிருக்கவும்வேண்டும்.

## புறங்கூறாமை.

ஒருவன் தருமத்தின்பெயரைக்கூட கனவிலாகிலும் நினையாமற்பாவங்களையே செய்கின்றவனாகவிருந்தாலும், அவன் பிறனைக்காணாவிடத்திகழ்ந்து பேசாதிருப்பானாகில், இவ்வொரு குணத்தினாலே அப்பாவங்களையெல்லாம் ஒழித்து புண்ணியபலத்தையடைவான்.

தருமங்களையழிப்பதைப்பார்க்கிலும் பிறனைக்காணாவிடத்து நிந்தித்துப்பேசுவது மிகவுங்கொடியது. அவனைக்கண்டவிடத்து ஒருமையானவனைப்போல நகைபுரிந்துறவாடுவதுஅதிலுங்கொடியது இவ்விதமாகப்புறங்கூறி உறவாடுவதைவிடஇறப்பதேநலம். ஏனெனில் இறந்துவிடுவதினாலே அப்பாவமொழிந்துவிடுமென்றும், அதனாலே புறங்கூறாதவர்பெறும்பலனை மறுபிறப்பிலடையலாகுமென்றும், முன்னோருரைத்திருப்பதினாலேதான்.

ஒருவன்முன் நின்று தாக்ஷிணியமில்லாமல் இகழ்ந்துபேசினாலுங் குற்றமில்லை, அதனால் சிநேகத்திற்கும் பங்கமுண்டாகாது அவனைக்காணாவிடத்திற்பழித்துச்சொல்வானாகில்அதனால் குற்றமுண்டாவதுமல்லாமல், பகையால் தீமையுமுண்டாகும்.

பிறரிடத்துக் குற்றத்தையே சொல்வோன், இயல்பாகவே தருமத்தையெடுத்துப்பேசுவானானாலும், அது மனமொத்தசொல்லென்று நம்பப்படாது. ஏனெனில், புறங்கூறும் அற்பகுணமவனிடத்துக் குடிகொண்டிருப்பதினாலேதான்.

பிறரிடத்துண்டாகியபழியைக்குறித்து அவர்களில்லாதவிடத்தில் இகழ்ச்சியாய்ச்சொல்லிக்கொண்டிருப்பவனது குற்றங்களிலொன்றை ஆராய்ந்தெடுத்து வெட்கப்படும்படி அவனது நேரில்சொன்னாலதைகேட்டு அவன் வருத்தப்படுவானே!

சுற்றத்தார்முதலாயினோர் தன்னைவிட்டு நீங்கியிருக்கும்படியாக அவர்களிடத்திற் குற்றங்கூறுங்குணத்தைப் பிரதான

மாகவுடையவன் அவர்கள் சந்தோஷிப்படும்படியான நல்வசனங்களைச்சொல்லஅறிவானே? அறிவானுகில்புறங்கூறுதலாகியகெட்டசெய்கை அப்பொழுதே அவனைவிட்டுநீங்கிப்போய்விடும்.

தன்னேடுநெருங்கி யுறவாடும் நட்பினனுடைய குற்றங்களைக்காணுவிடத்து தூறுகத்தூற்றுகின்றவன் அயலவனிடத்து என்னகொடுமையைச்செய்வானே தெரிந்திலேம்.

எல்லாவற்றையுஞ்சுமக்கின்ற பூமிதேவிக்குப் புறங்கூறுவோருடைய சரீரத்தைச்சுமப்பது மிகவும் பளுவாயிருக்கும். ஆனுல் அக்கொடியவர்களையுஞ் சுமப்பதுதனக்குத்தருமமென்றுகருதி மௌனமாகவிருக்கிருள். அதுபோல புறங்கூறுவோருடைய குற்றங்களையும் பொறுப்பது நல்லோர்க்குக் கடமையாயிருக்கும்.

புறங்கூறுவதற்காகப்பிறருடையகுற்றங்களை யாராய்கின்றதும் குற்றமாதலால், அவன்இந்தத்தன்குற்றத்தையும் ஆராய்வானுகில் இதனுலுண்டாகிய பாபமொழிந்து இருமையிலுஞ் சுகத்தையடைவான்.

ஆதலால், பிறர்மீது குற்றங்கூறுதலாகிய துற்குணத்திற்கிடங்கொடாமல் நற்குணத்தைவகிப்பதே நலமென்றெண்ணி நடக்கவேண்டும்.

## பயனில்சொல்லாமை.

அறிவுடையவர்கள் வெறுக்கும்படியான வீண்சொற்களைச்சொல்லுகின்றவன் எவ்வளவு சிறப்படைந்திருந்தாலும் அவனை நல்லோர்கள்மாத்திரமல்ல, எல்லவரும்இழிவாய்ப்பேசுவார்களேயல்லதுபுகழ்ச்சியாகப்பேசார்கள். ஆதலால் இதைக்கவனிப்பவன் பயனைத்தராதசொற்களைச்சொல்ல விரும்பான்.

அறிவுடையோர்கூடிய சபையினிடத்து பிரயோசனத்தைத்தராத வீண்சொற்களைச்சொல்லித் தனக்குத்தானேசந்தோஷங்கொண்டிருப்பவன் எவ்வளவுசெல்வத்தை யுடையவனுகவிருந்தாலும் அவன்நீதியை அறியாத அவிவேகியென்று சொல்லப்படுவதற்குப்பதிலாய் வேறென்றுஞ்சொல்லப்படான்.

நல்லகுணத்தையுடைய கல்விமான்கள் உண்மையும்,மாதுரியமுமில்லாத அப்பிரயோசனமானசொற்களைச்சொல்ல விரும்பார்கள். விரும்புவார்களாகில் அவர்கள் முன்பெற்றிருந்த மேம்பாட்டையும் சிறப்பையும் இழந்துவிடுவார்களென்பது சித்தமே.

பயனில்சொல்லாமை.

அப்பிரயோசனமானசொற்களை நல்லவைகளென்று எண்ணிச்சதாகாலமும் பிறரிடத்துச்சொல்லி மகிழ்ச்சியடைகின்றவர்களே மனிதர்களுக்குள் பதரென்று சொல்லப்படுகின்றார்கள்.

நீதியோடு சேராதசொற்களே பயனைத்தராதசொற்களாம் அவைகளை விவேகிகள் சொற்பனத்திலுஞ்சொல்ல வுடன்படார்கள். உடன்பட்டாலோ, விவேகியென்கிறபெருந்தன்மைஅவர்களைவிட்டுநீங்கிப்போய்விடும்.

புருஷார்த்தங்களுக்குள் முக்கியமானது மோக்ஷமென்றும், அதையடையவிரும்பிய நல்லோர்கள்பயனைத்தராதவீண் சொற்களைச்சொல்ல ஒருபோதும்விரும்பார்களென்றும், சொல்லிய இந்தநீதியை உணர்கின்றவர்கள் வீணானசொற்களைச்சொல்ல உடன்படார்கள்.

காமம் - வெகுளி - மயக்கம் - இவைகளைத்துறந்த பெரியோர்கள மறந்தாவதுபுன்மொழிகளைப்பேசார்கள். ஏனெனில்,புன்மொழியினாலுண்டாகுந் தீமைகொடியதென்று முன்னோருரைத்த நீதிவாக்கியங்களின்பொருளையுணர்ந்திருப்பதினாலேதான்.

ஆதலால், பயனிலாப்புன்சொற்களைப்பேசுகிறதினால் பற்பலநன்மைகளுங்கெடுமென்றுணர்ந்து அவ்வழக்கத்திற்கிடங்கொடாதிருக்கவேண்டும்.

# தெரிந்துசெயல்வகை.

உலகத்தில் ஒருகாரியத்தைச்செய்யமுயல்கின்றவர்கள் அதனாலுண்டாகும் நன்மைதீமைகளைக்குறித்து முன்னமே விசாரித்தறிந்து பின்பு காரியமுயற்சிசெய்து நன்மைபெறவேண்டும்.

ஒருதொழிலைச்செய்வதினால் இலாபமும்நஷ்டமுமுண்டாவது இயல்பாயிருக்குமாதலால், நஷ்டத்தைமாத்திரம் நோக்கி அத்தொழிலைவிட்டுவிடலாகாது. ஆனால் நஷ்டமிவ்வளவாயிருக்குமென்றும், இலாபமிவ்வளவாயிருக்குமென்றும், தெரிந்துகொண்டு இலாபம் அதிகமாயிருக்குமாயின் தொழிலைவிடலாகாது. நஷ்டமதிகமாகக்காணப்படுகிறபக்ஷத்தில் அதையுடனே விட்டுவிடவேண்டும்.

ஒருகாரியத்தைத்தொடங்கும்போதேஅதனாலுண்டாகும் லாபநஷ்டங்களின் ரீதியையும், அதைநடத்தவேண்டிய விதத்தையும், அதற்குநேரிடுமிடையூறுகளையும், அவைகளை நீக்கிக்கொள்ளத்தக்கமுகாந்திரங்களையும், இவைமுதலாகிய காரியங்களையும்புத்திக் கூர்மையல் டகுத்தறிந்து அக்காரியத்தைச்செய்ய

முயன்றால் பலனையடையலாம். இவைகளிலொன்றுகுறைந்தாலும் நஷ்டமடையவேண்டியிருக்கும்.

ஒருவன் தான்செய்புந்தொழில் தனக்குச்சாத்தியமாகுமென்றும் ஆகாதென்றுந்தெரியாமல் தன்னால் நடத்தக்கூடாதஅசாத்தியமானதொழிலில் பிரவேசித்து அதைமுடிப்பதற்குமுயற்சிசெய்வானாகில் அவன்கடைசியில் பலநஷ்டத்தையடைந்து கெட்டுப்போவான்.

ஒருகாரியத்தைச்செய்ய கருத்துகொண்டவன் அதைத்தனக்குமேலான புத்திமான்களிடத்துச்சொல்லி அவர்களுடைய அபிப்பிராயத்தைத்தெரிந்துகொண்டு பின்பு தான்தனியாகவிருந்து தகுந்தகாதென்றுஆலோசித்துச்செய்வானாகில் அப்படிக்கொத்தவனுக்கு எல்லாக்காரியமும் சாத்தியமாகும்.

ஒருகாரியத்தைத்தொடங்குவதற்குமுன்னமே அதைக்குறித்துத்தகுந்தபடி யோசித்துத்தொடங்கவேண்டும். அப்படியல்லாமல்தொடங்கியபின்பு ஆலோசிப்போமென்று ஆலசியமாகவிருந்துவிட்டால் அதினால் நேரிடுந்துன்பத்தைக்குறித்து துயரமுறவேண்டும். ஆதலால் எக்காரியத்திற்கும் முன்யோசனைவேண்டும்.

எல்லவராலேயும் அங்கீகரிக்கப்படும்படியானகாரியத்தையெண்ணிச்செய்வதேதருமம். அப்படிச்செய்தாலதற்குயாவருஞ்சந்தோஷமாகவே சகாயஞ்செய்து அக்காரியத்தை முடிவுபெறும்படிச்செய்வார்களேயல்லதுஇகழ்ச்சிசெய்யார்கள். தகாதவீண்காரியத்தைச்செய்தாலோவெனில் அதற்கொருவருமுடன்படாமலிருப்பதுமல்லாமல் யாவருங்கைகொட்டி நகைப்பார்கள்.

ஆதலால், ஒருகாரியத்தைச்செய்யத்தொடங்குவதற்குமுன்னமே அது தகுந்தசாதென்று தெரிந்துசெய்யவேண்டும்.

## பொச்சாப்பு.

பொச்சாப்பெனப்படும்மறதி யாரிடத்திலிருக்கின்றதோ அவர்களுக்குள்ள எல்லாச்செல்வமும் சிறப்பும் அழிந்துபோகுமென்று முன்னோருரைத்திருக்கிறார்கள்.

மறதியென்பதுதீராக்கோபத்தைப்பார்க்கிலும் கொடியதாம். அதைப்பற்றறவொழித்தவனுக்கு மற்றக்கெட்டகுணங்களிருந்தாலு மவைகளைநீக்கவேண்டுமென்கிற பிரயத்தினம்வேண்டுவதில்லை. ஏனெனில், மறதியென்னும் ஓர்குணத்தைநீக்குவ

திஞல் மற்றவைகள் தமக்குத்தாமே விலகிப்போய்விடு மென்பதினுலேதான்.

ஒருவனை வருத்திக்கொண்டிருக்குந்தரித்திரம் அவனது அறிவை மழுங்கவைத்துக்கொண்டிருப்பதுபோல, மறதியென்னுந் துற்குணம் ஒருவனிடத்திருக்குமாகில், அது அவனுக்குண்டாகும் பிரயோசனங்களைக்கெடுத்து அவனைத்தரித்திரத்தில் வருந்தும்படிச்செய்யும்.

மறதியென்னும் மனச்சோர்வுடையவனுக்குக்காரியத்தாழ்வுநேரிடுமென்பது யாவர்க்கும் அநுபவமாயிருக்கும். அஃதெப்படியெனில், ஒருவன்எந்தக்காரியத்தைஎப்போதுசெய்யவேண்டுமோஅந்தக்காலத்தைமறந்துவிடுவானுகில்அதனுலவனுக்குக்காரியங்கெடுவதுமன்றி உத்தேசித்தபலனுங் கைகூடாது.

பின்னுலேவரப்போகிற துன்பத்தை முன்னுடிய றிந்ததப்புவித்துக்கொள்ளவேண்டிய யத்தனத்தைச்செய்யாமல் மறதியினுல் சும்மாயிருப்பவன் துன்பத்தையடைவானென்றும், அம்மறதிக்கிடங்கொடாமல் கவலைத்தோடிருப்பவன் துன்பத்திற்குள்ளாகமாட்டானென்றும், சொல்லப்பட்டிருக்கின்றது.

மனச்செருக்கிஞலுண்டாகும்மறதிசிறப்புடையநற்காரியங்களையிழந்துவிடச்செய்யுமாதலாலிதையுணர்ந்த நல்லோர்கள் அம்மறதிக்கிடங்கொடார்கள். ஏனெனில்அம்மறதிக்கிடங்கொடுப்பதே கேட்டுக்கிடங்கொடுத்ததாகுமென்பதினுலேதான்.

ஒருபொருளையடைய விருப்பங்கொண்டவன் மறதியாகிய சோர்வைத்தன்னிடத்திலில்லாமல் ஒழித்துவிட்டால்தான் அவனுக்கு அப்பொருள் கைகூடும்.

ஆதலால், மனதுக்குச்சோர்வைத்தரும் மறதியைத்துறந்துவிடும்புத்திமானுக்கு எல்லாநன்மையுந்தானேவந்து கூடுமென்கிறபிரமாணத்தை யாவருங்கைக்கொள்ளவேண்டும்.

## ஊக்கமுடைமை.

ஊக்கமுடைமையென்பது மனத்தயிரியத்தையுடைத்தாயிருக்குதல் - இம்மனத்தயிரியத்தையுடையவனுக்கு எல்லாச்சீருஞ்செல்வமுமுண்டாகும் - இம்மனத்தயிரியமில்லாதவனேனெனில், எவ்வளவுசெல்வத்தையுடைத்தாயிருந்தாலும் அதைக்காப்பாற்ற வல்லமையில்லாதவனுகவிருப்பானுதலால் தரித்திரத்தால் வருத்தமடைவான்.

மனதிலுதிக்கும் உற்சாகமே நிலைபெற்றசெல்வப்பேறுங்

குக்காரணமெனவும், அவ்வுற்சாகமில்லாதவர்களது செல்வம் நிலையில்லாத சரீரமழிந்துவிடுவதுபோ'லழிந்துவிடுமெனவும், சொல்லிய இந்தநீதியின் உண்மையையுணர்ந்தவர்களே தயிரியவான்களென்றும், அவர்களிடத்து லக்ஷ்மிதாண்டவமாடுவாளென்றும், சொல்லப்பட்டிருக்கின்றது.

உற்சாகமென்னுந்தயிரியத்தையுடையவன்தனக்குள்ளசெல்வப்பொருளையிழந்துவிடுவானானாலும், தயிரியத்தைவிடாமலிருப்பானாகில் அவனிடத்திலுள்ள தயிரியலக்ஷ்மியைத்தேடிக்கொண்டு பாக்கியலக்ஷ்மியும் அவனிடத்திற்குவந்துசேருவாள்.

அல்லிப்பூவின் தண்டானது சலத்தின்அளவுக்குத்தக்கபடி நீண்டுவருவதுபோல உற்சாகத்தையுடையவன் அதனளவுக்குத் தகுந்தபடி விருத்தியாகி மேன்மையடைவான்.

முயற்சியினாலேசெல்வமும்,செல்வத்தினாலேகொடையும் கொடையினாலேகீர்த்தியும், அடைந்திருப்பதற்குக் காரணம் உற்சாகமென்னுந்தயிரியமேயல்லது வேறல்ல. இவ்வகையாகக் கீர்த்திபெற்றவர்களைக்கண்டு சந்தோஷிப்படாமல் பொறாமையாலிகழ்ச்சிசெய்கின்றவர்களை உற்சாகமென்னுந் தயிரியமில்லாதஅறிவீனரென்று முன்னோர்கள் சொல்லியிருக்கின்றார்கள்.

கூர்மையானகொம்புகளையும் ஸ்தூலமானதேகத்தையுமுடைய யானையானது புலியோடெதிர்க்கஅஞ்சிப் பின்னிட்டோடுமேயல்லது முன்நிற்கமாட்டாது. அதுபோலமனிதன்காத்திரமானதேகமும், அதற்குத்தக்கபலமும், கூர்மையானவாயுதமும்பெற்றிருந்தாலும், மனத்தயிரியமில்லாத பேதையாகவிருந்தால் மாற்றானுக்கஞ்சிப்புறங்காட்டியோடுவானேயல்லாமல் முன்நிற்கமாட்டானாதலால், ஊக்கத்தைக்கைவிடலாகாது.

மிகுந்த உற்சாகமே மனிதனுக்கு உறுதியானவறிவாம். அஃதில்லாதவன் மானிடசுரூபத்தைப்பெற்றிருந்தாலும் காட்டில்வாழுமரங்களுக்குச்சரியாகவே சொல்லப்படுவான். ஏனெனில், மானுஷமெனப்படும் மனஊக்கமும், அதைக்கொண்டு செய்யப்படுங்காரியமுயற்சியும்இல்லாவிடின்மரமென்றுசொல்வதற்குத்தடையென்ன?

ஆதலால், உற்சாகமென்னும் மனத்தயிரியத்தையுடையவனிடத்து தயிரியலக்ஷ்மி குடிகொண்டிருப்பாளென்றும், அவனைச்சாதிப்பது அசாத்தியமென்றும், சொல்லியநீதியை யாவரும்அறிந்துநடக்கவேண்டும்.

## மடியின்மை.

மடியின்மையென்பது சோம்பலில்லாமையாம். அச்சோம்பலில்லாமலிருப்பவன் தான் நினைத்தகாரியத்தை முடிப்பானென்றும், சோம்பலையுடையவன் எவ்வளவுசெல்வத்தைப்பெற்றிருந்தாலும் அதை விருத்தியாக்குவதுங்காப்பதும் அவனால்கூடாதகாரியமாதலால், அது நாசமுறுமென்றும், சொல்லப்பட்டிருப்பது அநுபவத்திற்குஞ்சரியாயிருக்கின்றது.

ஒருவனதுகுடும்பம் ஈனதசையிலிருந்தாலும், அவன்சோம்பலையகற்றிமுயற்சிசெய்துவருவானாகில், அதனாலக்குடும்பம் மூன்றாம்பிறைச்சந்திரன்போல நாளுக்குநாள் விருத்தியாகி உயர்வையடையும். சோம்பலுடையவனதுகுடும்பமோவெனில் அதற்கெதிரிடையாகக் கிருஷ்ணபக்ஷத்துச்சந்திரன்போல் நாளுக்குநாள் தேய்வையடைந்து குறைந்துவிடும்.

நன்முயற்சியைவிட்டுச்சோம்பலைமேற்கொண்ட ஒருவனதுகுடி நசித்துப்போவதுமல்லாமல், அவனுந் துன்பத்திலழுந்திகெட்டுப்போவான். ஏனெனில், நடப்பதுநடவாமற்போகாது, நடவாதது நடக்கவறியாது, என்கிறஆலசியவசனத்தைபநுசரித்து நடப்பது கேட்டுக்கிடமென்று முன்நூற்களிலுரைத்திருப்பதினாலேதான்.

மிகவும்புராதனமானகப்பல் பார்வைக்குமாத்திரம் மிகுந்தபலமுள்ளதாகக் காணப்பட்டாலும், அதைநன்றாய்ப்பரிசோதியாமல் அதனிடமாய் பலவிதசரக்குகளையேற்றி இலாபத்தைச்சம்பாதிப்பதின்பொருட்டு கடல்யாத்திரை செய்துகொண்டிருக்கும்போது அக்கப்பல் பலக்குறைவால் நடுக்கடலிலழுந்தி பலவிதநஷ்டத்தையுந்தருவதுபோல - ஆலசியம் - மறதி - சோம்பல் - இம்மூன்றுகுணங்களும் முதலில் இன்பத்தைத்தருவதுபோலத்தோன்றினும், பின்பு பலதுன்பத்திற்காளாக்கிவிடுமென்பதுசத்தியமேயாம்.

ஒருசக்கிரவர்த்தியினுடைய செல்வமுழுதும் ஒருவனுக்கு முயற்சியில்லாமலே வந்துசேர்ந்தாலும், அவன் சோம்பலையுடையவனாகவிருந்தால் அச்செல்வத்தாலுண்டாகியசவுக்கியத்தையவன் அநுபவிபாமற்போகிறதுமல்லாமல் அச்செல்வமும்அவனையல்லாமலே அழிந்துபோய்விடும்.

சோம்பலினாலே நன்முயற்சிசெய்யாதவன் நல்நடத்தையுடையபெரியோர்களும் உத்தமசிநேகரும்சொல்லிய புத்தியை

க்கேளாமற் கெடுதியடைவானாகிலும், அக்கெடுதியினால்வரும் இகழ்ச்சியைக் கேள்விப்படுவதினாலுண்டாகும் வெழ்க்கத்தினாலாகிலும் சோம்பலைவிடான்.

காரியங்களுக்கு விக்கினத்தைச்செய்யும் சோம்பலானது ஒருவனிடத்துண்டாயிருக்குமாகில் அது அவனைப்பகைவருக்குத்தாழ்ந்துநிற்கும்படியாயும், அவர்களேவிய பணிவிடைகளைச் செய்யும்படியாயும், செய்விக்கும்.

சோம்பலைவிட்டு முயற்சிசெய்கின்றவனுக்கு யாதுகுற்றம்வரினும் எளிதாக ஒழிந்துவிடுமென்றும், அவனுக்குஇம்மையிலும் மறுமையிலுமுள்ள எல்லாநன்மைகளுங் கைகூடுமென்றும், முன்னோர்கள் உரைத்திருக்கிறார்கள்.

மடியென்னுஞ்சோம்பல் சரீரத்தின் வியாதியாயிருக்கின்றது, அதனால் குற்றமுந்துயரமுந் துன்பமு முண்டாகின்றன. எப்படியெனில், சோம்பலுள்ளவன் பொய்பேசப்பின்வாங்காமல்லவனாகிலுந்தன்னைஒருவனிடத்துக்குப்போகச்சொல்லுமளவில் உடனே அவன்வீட்டில் இல்லையென்றும், ஒருவஸ்துவைக்கொண்டுவரச்சொன்னால் அது அகப்படாதென்றும், சொல்லிவிடுவான். ஆதலால், அவனுக்குப்பொய்யாலுண்டாகுங் குற்றம்நேரிடும். மேலும் சோம்பலுள்ளவன் தனது சவுக்கியத்தைவிரும்புவது மாத்திரமேயல்லாமல், அதற்குரியகாரியத்தைச்செய்யமாட்டான். அவனுக்குக்காரியமுயற்சியின்மையால் அவனுடைய்செல்வமும், அநுபவமும்நாளுக்குநாள்குறைந்துவிடும். இதனால் அவனுக்குத்துயரம்நேரிடும். பின்னும்மேற்படிச்சோம்பலுள்ளவன் எப்போதும் அந்நியனுக்குட்பட்டிருப்பான், அவனுக்குச்சமீபத்திலிருக்கிறவஸ்துவைக்கூட அந்நியனுடைய உதவியில்லாமற் பெறமாட்டான். அப்படிக்கொத்தவனுக்கு எந்தத்துன்பந்தான் நேரிடாது?

ஆதலால், சோம்பலுக்கிடங்கொடாமல் அதை நீக்கிவிடவேண்டும்.

## புலான்மறுத்தல்.

கொல்லாமையென்னும்விரதமொன்றினாலேயேஎல்லாத்தருமங்களையும் எளிதிலடையலாமென்று சொல்லியிருக்கிறபடியால், புலாலுண்ணலென்னும் மாம்சபக்ஷணமுங் கொலைபாதகத்தோடுசேர்ந்ததென்றும், அதையும் விலக்கவேண்டுமென்றும், முன்னோர்களுரைத்திருக்கிறார்கள்.

பயனில்லாத தன்சரீரத்தின் மாம்சத்தைவளர்ப்பதின்பொருட்டு மற்றொருசெந்துவைக்கொன்று அதன்மாம்சத்தையுண்ணவிரும்புகின்றவன் அறிவில்லாத கொடியோனென்று சொல்லப்படுவான்.

திரவியத்தினாலுண்டாகும் பயனையிழப்பதற்கு அதனைக்காப்பாற்றாமையே காரணமாகவிருப்பதுபோல அருளாலுண்டாகும் பயனையிழப்பதற்கு மாம்சபக்ஷணங்காரணமாக விருக்குமெனப்படுவதால் புலாலைப்புசிக்கின்றவர்களுக்கு அருளில்லையென்பது பிரகாசமாய்விளங்குகின்றது.

சுகதுக்கங்களை உணரத்தக்கதாகியதனதுடல்போன்றமற்றொன்றினுடலைச்சம்பாரங்களால் இனியசுவையுண்டாகும்படிச்சமையற்செய்து அதையுண்டு மகிழ்ச்சியடைகின்றகொடியபாதகர்களுடைய இருதயங்களில் அருளென்னுந்தயை அணுமாத்திரமும் விளங்காதென்பது சத்தியமே.

கொல்லாமையே அருளென்றும், கொல்லுதலே அருளில்லாதபாபச்செய்கையென்றும், அக்கொல்லுதலால்வந்தவூனத்தின்னுதல் அறனல்லாததென்றும், சொல்லிய நீதியையுணர்ந்து நடப்பதேதருமமாம்.

ஓருயிரையுங் கொல்லாதவனையும், புலாலையுமுண்ணாதவனையுமிருக்கின்ற மகாபுருஷனை எல்லாவுயிருங்கைகூப்பித்தொழுதுவணங்குமென்று கூறப்பட்டிருப்பதின் பொருளென்னவெனில், இவ்விதப்பொருளையுணர்ந்தவன் மறுமையில்தேவர்களினுமுயர்ந்தவனாவானென்பதுதான்.

தருமங்களுக்குள் சிறந்தது கொல்லாமையென்றும், அதனோடுகூடப்பொய்சொல்லாமையுமுண்டாயிருக்குமாகில் அது எல்லாவற்றினுஞ்சிறந்ததருமமென்றும், பெரியோருரைத்திருக்கிறார்கள்.

மோக்ஷத்திற்குறுதியைத்தரும் தர்மமார்க்கமென்னவெனில், யாதொருயிரையுங்கொல்லாமையாம். இதை விரதமாகக்கொண்டவனது ஆயுள்மீது யமனணுகுவதற்கஞ்சுவான்

உலகமயக்கங்களைவிட்டுத் துறவறவாசிரமத்தைப்பெற்றபெரியோர்களெப்பார்க்கிலும் உயர்ந்தவன்யாரெனின், யாதொருயிரையுங்கொல்லாதிருப்பவனும் புலாலையுண்ணாமலிருப்பவனுந்தானே.

இன்பத்தையுஞ்செல்வத்தையுமதிகப்படுத்திக்கொள்வதின்

பொருட்டியாகாதிவிஷயத்தில்உயிர்வதைசெய்யலாகுமென்று சாஸ்திரபிரமாணமுண்டாயிருந்தாலும், அது சான்றோருக்கு ஒவ்வாதசெய்கையாதலால் அதைக்கனவிலும்நினைக்கலாகாது.

ஒருவன் தனது உணவிற்காக ஒருயிர் வதைசெய்வதினா லுண்டாகிய பாவத்தையறியாமற்போனாலும், அவனை அப்பா வம்விடாமல் துடர்ந்துகெடுக்கும், அன்றியும் அவனைநல்லோ ர்கள் அருளுள்ளவனென்று நினையார்கள். ஏனெனில் ஒருபிரா ணியைக்கொண்டுவந்து அதற்குவேண்டிய ஆகாரத்தைக்கொ டுத்துவளர்ப்பதினால் அப்பிராணிதன்னைரக்ஷிக்கின்றவனென்று அவனிடத்து விசுவாசத்தைப்பாராட்டிக்கொண்டிருக்க அதனி டத்துசற்றுமிரக்கமில்லாமல் அதைவதைத்துண்பதினாலேதான்.

இப்பிறப்பில் நோயினாலேயும் தரித்திரத்தினாலேயும் வரு த்தப்படுகின்றவர்களேமுற்பிறப்பில்உயிர்களைவதைசெய்தகொ டியோர்களென்றுபலநூலோருஞ்சொல்லியிருக்கிறார்கள்.

ஆதலால், புலாலென்னும்ஊனைஉண்ணாமலுங் கொலைசெ ய்யாமலுமிருக்கவேண்டும்.

## கீழ்மை.

கோழியைவளர்ப்பவர்கள் நாள்தோறுங்காலமே அதற்கு நல்லஆகாரத்தைக்கொடுத்து வளர்த்தாலும், அதுகுப்பையைக் கிளறுந் தன்சாதித்தொழிலைவிடாது அதுபோல கீழ்மையான வனுக்குத் தருமங்களைக்கண்ணாடியைப்போலெடுத்துக்காட்டி னும், அவன்அதையுணராமலும், அதனிடத்துபுத்தியைச்செலு த்தாமலும், தன்னியல்பின்படியே நடப்பான்.

குற்றமற்றபெரியோர்களிடத்திற்குப்போய் ஆத்துமலா பத்தைப்பெறுவது நல்லமார்க்கமென்று கீழ்மக்களுக்குச்சொ ல்லினும், அவர்கள் அதைமேற்கொள்ளாமல் நித்திரைகொள்ள வேண்டுமென்றாவது வேறொருவேலையைச்செய்யவேண்டுமெ ன்றாவதுபோய்விடுவார்களேயல்லாமல், நன்மையையடைய விரு ம்பார்கள்.

சான்றோர்கள் எவ்வளவுபெரியசெல்வத்தைப்பெற்றவர்க ளாயிருந்தாலும், தங்களுடைய ஒழுக்கத்திற்கு மாறாகநடவார் கள். கீழானவனோவெனில், அகண்டசெல்வத்தைப்பெற்றவனாக விருந்தாலும்,தான்செய்யும்பொல்லாங்காணகாரியத்தில்மனது ள்ளவனாயிருந்து அபகீர்த்தியைப்பெறுவானேயல்லது பெ ருமையடையான்.

ஒருவர்செய்தவுதவி தினையினது அளவுபோல் அற்பமாகவிருந்தாலும், அறிவுடையோரதனைப்பனையினது அளவுள்ளதாகவெண்ணிநடப்பார்கள். பனையினது அளவுக்கதிகமான உதவியைநாள்தோறும்பெற்றவர்கள் கீழ்மக்களாயின், அவர்களதைத்தினையளவாகவும் நினையாமல் இகழ்ந்துவிடுவார்கள்.

ஒருநாய்க்குப்பொற்பாத்திரத்தில் பாலுமன்னமுமிட்டுக் காவலாக மனிதனைவைத்துக்காப்பாற்றிக்கொண்டிருந்தாலும், அது பிறருடைய எச்சிற்கலையெப்போதுபோடப்படுமோவென்றிமைகொட்டாமற்பார்த்திருக்கும். அதுபோல கீழ்மக்களைப்பெருமையடையும்படியான பல முயற்சிசெய்து மேன்மைப்படுத்தினாலும், அவர்கள்செய்யுமிழிதொழிலாலவர்களொருகாலும்மேன்மையடையார்கள்.

நல்லகுலத்தோர் மிகுந்த செல்வத்தைப்பெற்றவர்களாகவிருந்துஞ்சொல்லத்தகாத வார்த்தைகளைச்சொல்ல அஞ்சுவார்கள். கீழ்மக்களோவெனில், முந்திரிப்பொன்னுக்குமேற் காணிப்பொன்னைப்பெற்றிருப்பார்களாகில் அவர்கள் தங்களைத் தேவேந்திரனுக்குச்சமானமாக வெண்ணிக்கொண்டு ஒருவரையும்மதியாமற்பேசுவார்கள்.

பசும்பொன்னினாலேசெய்த பாதரக்ஷையினிடத்துக் குற்றமற்ற நவரத்தினங்களையிழைத்து அழகுபெறச்செய்தாலும், அதுகாலிலணிவதற்கு யோக்கியப்படுமேயல்லது மற்றவிடத்தில்ஆபரணமாகத்தரித்துக்கொள்வதற்குப் பயன்படாது. அதுபோல கீழ்மக்கள் எவ்வளவுசெல்வத்தைப்பெற்றிருந்தாலும், அவர்களது இழிதொழிலால் அற்பமாகக்காணப்படுவார்களேயல்லாமல் மேன்மையடையார்கள்.

கடினவசனங்களைப்பேசுவதும், பிறருக்கு விபத்துவந்தகாலத்திலும் மனமிரங்காமற்களிப்பதும், அடுத்தவரைமதியாமல் இகழ்வதும், கோபம்வந்தகாலத்தில் சாந்தமடையும்படி நல்லவர்கள்சொல்லிய வார்த்தைகளைக்கேளாமல்அதிகமூர்க்கமடைவதும், இன்னும்பலவும் கீழ்மக்களுக்குரிய குணங்களாம். இக்குணங்கள் ஒருவேளை உயர்குலத்திற்பிறந்த ஒருவனிடத்திலிருக்குமாயின், அவன்கீழ்மக்களினுந்தாழ்வானவன். ஏனெனில் அவன்தனது துர்க்குணத்தால் நற்குலத்தைக் கெடுத்தானெனப்படுவதினாலேதான்.

கர்ப்பூரத்தினாலே பாத்திகட்டிக் கஸ்தூரியினாலே சேறுகு

ட்டி ஆயிரம்வருஷம்பன்னீர்வார்த்து வளர்க்கப்பட்டாலும்,உ ள்ளியானது தன்துர்க்கந்தத்தைவிடாமல் வைத்திருப்பதுபோ ல் கீழ்மக்கள் எவ்வளவுகாலம் நல்லோர்களுடையசகவாசம்பெ ற்றாலும், தங்கள் துர்க்குணத்தை யொருபோதும்விடார்கள்.

ஆதலால், கீழ்மக்களுடையகுணம் இத்தன்மையதென்று ணர்ந்து அந்தக்குணமுண்டாகாமல் யாவருங் காத்துக்கொள் ளவேண்டும்.

## குடிப்பிறப்பு.

புலியானதுபசியினால் வருத்தமுற்றதாயினும், புல்லைத்தி ன்னவிரும்பாததுபோல, நல்லகுடியிற்பிறந்தவன் எவ்வளவுத ரித்திரம்வந்தாலும், தன்குலத்திற்குத்தகுதியான வொழுக்கத் தைவிட்டுத்தாழ்வடையான்.

நல்லொழுக்கமும், இரக்கமும், பொறுமையும், ஆகியமூ ன்றுகுணங்களையும் காப்பவர்களே நல்லகுடியிற்பிறந்தவர்க ளெனுஞ்சிறப்பையடைவார்கள் அப்படிக்காக்காதவர்களோ வெனில், நல்லகுடியிற்பிறந்தவர்களென்று சொல்லப்படாமலி ருப்பதுமன்றி, தீயவொழுக்கமுள்ளவர்களென்றும், இரக்கமு ம்பொறுமையுமில்லாதமூர்க்கரென்றும், இகழப்படுவார்கள்.

மரியாதைக்குப்பாத்திரரான பெரியோர்கள்வரின், உட னே யிருந்தவிடத்தைவிட்டெழுந்திருந்து எதிரேசென்றுபச ரித்து வணக்கத்துடனேவரவழைத்து ஆசனத்தி லிருக்கச்செய் வதும், அவர்போகும்பொழுதுகூடப்போய் அவர்நில்லுமென நிற்பதும், ஆகியவொழுக்கங்கள் நல்லகுடியிற்பிறந்தவர்களிட த்திலிருக்குமேயல்லது மற்றவரிடத்திலிராது.

நற்காரியங்களைச்செய்வதே நற்குலத்திற்பிறந்தவருடைய ஒழுக்கமாதலால், அவ்வொழுக்கமில்லாதவர்கள் அக்குடியிற்பி றந்தும்பலனில்லை. ஏனெனில், தங்களுடைய கெட்டநடக்கை யால் தாங்கள்கெடுதியடைவதுமல்லாமல், குலமுமிழிந்துபோ குமென்பதினாலேதான்.

இழிகுலத்தானிடத்து ஒருநற்குண முண்டாயிருக்குமாகி ல்அதனாலவனை நற்குடியிற்பிறந்தவனென்று எண்ணலாகாது. ஏனெனில், அக்குணம் அச்சத்தைப்பற்றியாவது ஒருகாரியத் தைச்சாதிப்பதின்பொருட்டாவது உண்டாயிருக்குமென்பதி னாலேதான்.

நல்லகுடியிற்பிறந்தவர்கள் கல்லாதிருப்பதினாலும், இழி

தொழில்செய்யும்படி நேரிட்டதினாலும், சொற்சோர்வுபட்டதினாலும், இரப்போருக்குக்கொடுக்கவில்லாமை நேரிட்டதினாலும். அச்சத்தையும் நாணத்தையுமுடைத்தாயிருப்பார்கள். ஏனெனில், அவர்களுக்குமுன்னோர்களிருந்த நிலைமைகுறைந்து இழிவானவர்களுடைய நிலைமைக்குவந்தோமென்கிற தோற்றமுண்டாயிருப்பதினாலேதான்.

நற்குலத்திற்பிறந்தவொருவனுக்குக் கர்மாநுபவத்தால்மீளாததரித்திரம்நேர்ந்தாலும், அவன் உலகவழக்கத்திற்கு விரோதமானகாரியங்களைச்செய்யாமல்நலமேசெய்வான். அஃதெப்படியெனில், சந்திரனை இராகுவெனுங்கரும்பாம்பு ஒருபுறத்திற் பற்றிவிழுங்கிக்கொண்டிருக்கினும், அதைப்பாராட்டாமல் அச்சந்திரன் தனது மற்றொருபுறத்தைக்கொண்டுபூமிமுழுதும் பிரகாசிக்கும்படிச்செய்வதுபோலவாம்.

சிரேஷ்டமான குலத்திற்பிறந்தவொருவன் தாழ்வுறுமையுற்றகாலத்திலும், உபகாரத்தைச்செய்வானேயல்லது அபகாரத்தைச்செய்யான். கீழோர் அதிகமாகச்செல்வத்தைப்பெற்றிருந்தாலும், செய்யவேண்டியநற்காரியத்தைச்செய்யாமல் அற்பவிஷயத்தில் மனதைச்செலுத்தித்தமது சிறியகுணத்தைவெளியாக்கிக்கொள்வார்கள். அஃதெவ்வாறெனின், சிங்கத்தின்சர்மத்தைத்தரித்திருந்த ஒருகழுதையைப்பார்த்தவர்களெல்லாரும் சிங்கமென்று நினைத்துப்பயமுள்ளவர்களாயிருக்குங்காலத்தில் அது பெட்டைக்கழுதையைக்கண்டு தனது பெருங்குரலைக்காட்டி இகழ்ச்சிபெற்றதன்மைபோலவாம்.

உத்தமகுலத்திற்பிறந்த ஒருவன் யாதொருபொருளுமில்லாமல் வருத்தமுறுங்காலத்திலும், அவனைவந்தடுத்த வெளியவருக்கு வேண்டிய உதவியைச்செய்யச்சத்தியில்லாவிடினும், தன்னாலாகிய உதவியைச்செய்து ஆதரிப்பானேயல்லது கைசோரவிடான். அஃதெவ்வாறெனின், மகாநதியானது வற்றிப்போனகாலத்திலுந்தோண்டப்படுமாகில் நல்லசலத்தைக்கொடுத்து தாகத்தைத்தீர்க்குமதுபோலவாம்.

ஒழுக்கமும், மெய்மையும், நாணமும், ஆகிய விம்மூன்றுகுணங்களும் உயர்குலத்தாருக்குச்சுவபாவமாக விருக்குமாதலால், அவர்களிவைகளைவழுவிநடவார்கள். நடப்பார்களாயின் இழிகுலத்தாரென்றே சொல்லப்படுவார்கள்.

உயர்ந்தகுலத்திற்பிறந்த ஒருவனுக்குள்ள திரவியம் முன்

னிருந்த அளவுக்கு அனேகம்பங்கு குறைவடைந்திருந்தாலும் அவன் அக்காலத்திலும் இரப்போர் முதலாகியவர்களுக்கு உபகாரஞ்செய்வதில் மனத்தளர்ச்சியடையான்.

களங்கத்தையுடைய சந்திரன் உலகத்திற்கு நன்மையைச் செய்து வருவதால் அச்சந்திரனிடத்துள்ள களங்கத்தைப்பெரியோர்கள் பாராட்டாமல் குணத்தைப்பாராட்டிவருகிறார்கள் அதுபோல நற்குலத்திற்பிறந்தவர்களிடத்து ஒருவேளை குற்றமுண்டாயிருந்தாலும், அது ஒருநன்மையைப்பற்றி வந்ததாகவிருக்குமேயல்லதுவேறாகவிராதென்று நினைக்கத்தக்கதாகும்.

பழமையாகவரும்நற்குலத்திலுற்பத்தியான ஒருவன் அன்பில்லாதவனைக்காணப்படுவானாகில், அவனது பிறப்பிடத்தைக்குறித்து உலகத்தாருக்குஐயமுண்டாயிருக்கும். ஏனெனில் நிலத்தினியல்பை அதனிடத்து விதைத்தவிதைகளின் முளைகளாலறிவதுபோல் புத்திரர்களினியல்பால் அக்குலத்தின்தன்மையறியப்படுமென்பதினாலேதான்.

ஆதலால், புத்திமான்களானவர்கள் தங்கள் நன்னெறிநடக்கையால் தங்கள்குலத்திற்குச்சிறப்புண்டாகும்படி மானம் முதலான நற்குணங்களைமேற்கொண்டு நடக்கவேண்டும்.

## மேன்மக்கள்.

மேன்மக்களெனப்படும் நற்குலத்திற்பிறந்த கனவான்களுக்கியல்பாகவிருக்கவேண்டிய குணங்கள் யாவெனில், மாற்றார் - அன்பர் - பிறர் - என்னும் மூவகையாரிடத்திலும் பேதமில்லாத அன்பும், பழிபாவங்களுக்கு அஞ்சிநடத்தலும், வஞ்சனையின்றியுபகரித்தலும், அடிமைமுதலிய யாவரிடத்திலும் அருள்புரிதலும், வாய்மையாலுண்டாகும் வாக்குசுத்தியும், உரைத்த சொற்றவறாமையும், பேதையரிடத்திரக்கமும், பெரியோர்களிடத்துவணக்கமும், சமமானவரிடத்துத்தகுதியானமரியாதையும்,இன்சொலுரைத்தலும், குலாசாரம் சிஷ்டாசாரம் இவைகளைக்காத்தலும், அதிதிபூசைமுதலான சத்காரியங்களைச்செய்தலும், நடுவுநிலைமையும், இன்னும்பலநற்குணங்களுமேயாம்.

மேன்மக்களென்னும் நற்குலத்திற்பிறந்த நல்லோர்கள் உலககாரியங்களைவிசாரித்து குணத்தையுங்குற்றத்தையுமுணர்ந்து முன்சொல்லப்பட்டதைச் சிரத்தினாற்கொண்டாடிப் பின்சொல்லப்பட்டதை மனதில் அடக்கிப்போடுவார்கள் அஃதெவ்வாறெனின், பரமசிவனுனவர் திருப்பாற்கடற் கடையப்பட்

டபோது அதிலுதித்தசந்திரனைச்சிரசில்தரித்து ஆலாகலத்தைக் கண்டத்தில் அடக்கியதன்மைபோலேதான்.

மேன்மக்களெனுஞ்சான்றோர்களுக்குச்சமமாக ஆகாசத்திற்பிரகாசிக்குஞ்சந்திரனைக்கூட உவமிக்கலாகாது. ஏனெனில் சந்திரன் தனதுகுளிர்ச்சியான கிரணங்களால் உலகத்தின் இருளையகற்றிச்சனங்களுக்குச்சந்தோஷத்தைக்கொடுக்கினும், களங்கியெனப்பெயர்பெறுவான். சான்றோர்களோவெனில், அப்படிக்கல்லாமல் உலகத்தாருடைய மனதினிருளை நீக்கி யவர்களைக்களிப்புறச்செய்வதுமல்லாமல், நிஷ்களங்கராயிருப்பதினாலேதான்.

மேன்மக்களாகிய மேலானோர் சாத்தியாசாத்தியங்களைக் குறித்து எவ்வளவும்நினையாமல் குணதோஷங்களை மாத்திரம் நினைத்துப்பார்த்து குணமுள்ளகாரியம் அசாத்தியமாயிருந்தாலும்தமக்குள்ள மனத்தயிரியத்தினால் அதைச்சாதிக்க முயல்வார்கள். அஃதெப்படியெனில், நரியின்மீதெறிந்த அம்பு தப்பமல் அம்மிருகத்தைக்கொல்லினும், சிங்கத்தின்மீதெறிந்த அம்பு தப்பிப்போய்விடினும், இதிலும் அதுசிறந்ததல்லவென்றுரைத்திருக்குந்தன்மைபோலவாம். — இதற்குப்பொருளென்னவெனில், சிறிதொழிலைச்சாதித்ததினால் பெருமையுண்டாகாதென்பதும், மேலானதொழிலைச்சாதிக்காவிடினும் சாதிக்கமுயல்வதினாலேயே பெருமையுண்டாகுமென்பதுந்தானே இதற்குநிதர்சனமென்னவெனில், பரமசிவனோடெதிர்த்து யுத்தஞ்செய்த மன்மதன் பஸ்மமானபோதிலும் இக்காலவரையில் மேன்மையான கீர்த்தியடைந்திருப்பதேயாம்.

மேலானவர்களுக்குக்கர்மானுபவத்தின்பொருட்டுவந்ததரித்திரம் அவர்களுடைய சரீரத்தை மெலிவித்து நரம்புதோற்றும்படிச்செய்யத்தக்க கொடியதாயினும், அதன்வருத்தத்தைப்பாராட்டாமல் அவர்கள் மானமெனுங்கயிற்றினால் கட்டப்பட்டவர்களாய் இரத்தல்முதலான சிறியதொழிற்களிற் செல்லவுழியார்கள்.

கருப்பங்கழியைக்கண்டங்கண்டமாய்த்திருத்தி ஆலையில் வைத்து நெருக்கினாலும், அது இனியசுவையுள்ள ரசத்தைத்தருமேயல்லது சசப்பைத்தராததுபோல மேலானவர்கள் புன்மொழிகளால் நிந்திக்கப்படினும் தங்கள்வாக்கில் பொல்லாங்கான தாழ்ந்தவசனங்களை வரவொட்டாமல் மதுரமானமொழிகளையே பொழிந்துகொண்டிருப்பார்கள்.

ஆதலால், மேன்மக்களுடையஒழுக்கநெறியில்நின்றுபெருமையடையவேண்டியதைவிட நன்மார்க்கம்வேறொன்றுமில்லாமையால், யாவரும் அதைக்கருதி நடக்கவேண்டும்.

## அடக்கமுடைமை.

மனம்-வாக்கு-காயம்-இம்மூன்றையுங் கெட்டவழியிற்செலுத்தாமல் நல்லவழியிற்செலுத்தலே அடக்கமுடைமையாம்.

ஆலாகலவிஷத்தைப்பார்த்து ஒருகல்விமானுரைத்திருக்கின்றதென்னெனின், அடா ஆலகாலமே - நீயேகொடியவனென்று மிகவும் இறுமாப்படையாதே. ஏனெனில், துஷ்டருடைய வாக்கில்வருகின்றகெட்டசொற்களநேகம் உன்னிலுங்கொடியவைகளாகவிருக்கின்றனவென்பதை நீயறியாயோ! அறியாய். அறிந்தாலுனக்கிவ்வளவுஇறுமாப்பிராது என்பதுதான் ஆதலால்சொற்குற்றத்திலகப்பட்டு துன்பப்படுவதற்கு நாவேகாரணமாயிருக்கின்றமையால், மற்றவைகளைக்காவாவிட்டாலும் அகத்தியமாய் நாவைக்காக்கவேண்டும்.

தீயசொல்லால் ஒருவனுக்கு மனவருத்தமுண்டாகும்படி செய்கிறவன் பலதுன்பத்திற்குமுள்ளாகி வருத்தமடைவானென்றும், முன்தான்வருந்தித்தேடிய தருமங்கள்யாவையுமிழந்துவிடுவானென்றும், சொல்லியிருப்பதை அனுசரித்து அடங்கிநடப்பவர்களே அடக்கமுடையவர்கள்.

நெருப்பினாற்சுடப்பட்டபுண் சரீரத்தில் துன்பஞ்செய்துகொண்டிருந்தாலும், அதுஅப்பொழுதேநெஞ்சினிடத்திருந்து ஆறிப்போய்விடும். அடக்கமல்லாத தீயசொல்லோவெனில், எப்பொழுதும் மாறாத்துயரத்தைத்தருமாதலால், அதினுமிகுது கொடியதேயாம்.

அடக்கமாகியதருமத்தை விரதமாகக்கொண்டவர்களுக்கு அது இகத்தில் சிறந்தஆபரணமாகப் பிரகாசிப்பதுமல்லாமல், பரலோகத்திலுமவர்களைத்தேவர்களுக்குள் சிறந்தவர்களாக்கும். அடக்கமில்லாதவர்களோவெனின், இகத்தில்நிந்தையும், பரத்தில்நரகத்தையுமடைவார்களென்று சொல்வதற்கு ஐயமுறவேண்டியதேயில்லை.

வர்ணாசிரமதர்மங்களுக்கு மாறுபாடில்லாமல் அடங்கிநடப்பவர்களுடைய பெருமைமிகவும்பெரிதாகவுணரப்படும்

வர்ணமென்பது - நால்வகையாகவிருக்கும். பிராமணசாதி பிரமவர்ணமென்றும், அரசசாதி க்ஷத்திரியவர்ணமென்றும்,

யணிசசாதி வைசியவர்ணமென்றும், சூத்திரசாதி சூத்திரவர்ண மென்றுஞ்சொல்லப்படும்.

ஆசிரமமென்பது-பிரம்மசரியமெனவும், கார்கஸ்தியமெனவும், வானப்பிரஸ்தமெனவும், சன்னியாசமெனவும், நால்வகையாகவிருக்கும்- இவ்வாசிரமங்கள் பிராமணருக்குள்ளேமாத்திரம் இப்பொழுதுஞ்சரியாக வழங்கிவருகின்றன.

பிரம்மசரியமென்பது - எட்டுவயதில் உபநயனஞ்செய்யப்பட்டபிள்ளைகள்குருகுலவாசம்பெற்று வேதசாஸ்திரங்களைப் படித்துக்கொண்டிருப்பதும் அந்தஆசிரமத்திற்குரிய மற்றகர்மங்களையியற்றுவதுமாம். இப்படிக்கொத்தபிள்ளைகட்குப்பிரம்மசாரிகளென்று பெயர்கூறப்படும்.

கார்கஸ்தியமென்பது-பிரம்மசரிய விருதஸ்மாப்தியடைந்து விவாகஞ்செய்துகொண்டு அதற்குரிய அவுபாசனவைசுவதேவமுதலான கர்மங்களையியற்றுவதோடு அதிதியுப்பியாகதபிதிருபூசை தேவபூசைமுதலான காரியங்களையுமியற்றுவதாம். இதுவே இல்லறமெனப்படும். இந்தவாசிரமமுடையவன் கிரகஸ்தனெனப்படுவான்.

வானப்பிரஸ்தமென்பது-நகரம், பட்டணம், இவைகளின்வாசங்களைவிட்டு சாத்துவிகஆகாரம்புசித்து அவுபாசனதிகர்மங்களையியற்றி வனத்திற்சென்று தவம்புரிந்து நடப்பதாம். இந்தஆசிரமத்தையுடையவன்வானப்பிரஸ்தனெனப்படுவான்.

சன்னியாசமென்பது-சிகாயஞ்ஞோபவீதவிசர்ச்சனமும், சர்வசங்கபரித்தியாகமுஞ்செய்து கிராமேகாரத்திரமாய் சஞ்சரித்துக்கொண்டிருக்கையிலுமந்த ஆசிரமத்திற்குள்ள மற்றகர்மங்களையுமியற்றி பிக்ஷான்னபோசனஞ்செய்து புத்திரமித்திரகளத்திரங்களைத்துறந்துவிட்டிருப்பதாம். இதற்குத்துறவறமென்றுபெயர்.

இப்படிக்கொத்தவர்ணாசிரமநெறிதப்பாமலும், நீதிநெறி தவறாமலும், பஞ்சேந்திரியங்களெனப்படும் ஐம்பொறிகளையும் தனதிச்சையின்படி செல்லவொட்டாமல் அடக்கிநடப்பதே அடக்கமுடைமையாம்.

இயாவர்க்கும் நன்மையைக்கொடுக்கும் அடக்கமானது செல்வர்களிடத்திலுண்டாயிருக்குமாகில் அது வேறொருசெல்வமாகப்பிரகாசித்துக்கொண்டிருக்கும்.

மெய்-வாய்-கண்-மூக்கு-செவி - என்னும் ஐம்பொறிக

ளையும் அவைகளின்வழியிற்செல்லவொட்டாதபடி அடக்கவல்லவர்களுக்குத் தேவர்-மக்கள்-விலங்கு-புள்-ஊர்வன-நீர்வாழ்வன-தாவரம்-எனச்சொல்லிய எழுவகைப்பிறப்பிலும் அவ்வடக்கமென்னும் வல்லமையே காவலாகவிருக்கும்.

ஆதலால், அடக்கத்தைப்பார்க்கிலும் உயர்ந்தசெல்வம் வேறொன்றுமில்லாமையால், எல்லோருமதைச்சிறந்தபொருளாகக்கருதிக்காப்பாற்றிக்கொள்ளவேண்டும்.

## ஒழுக்கம்.

ஒழுக்கமானது யாவர்க்குஞ்சிறப்பைத்தருகின்றதாதலால் அதை உயிரைப்பார்க்கிலுஞ்சிறந்ததாகக்கருதி அதற்கிடையூறில்லாமல் நடத்தவேண்டுமென்பதை யுணர்ந்தவர்களே ஒழுக்கமுடையவர்கள்.

இம்மைமறுமைக்குத்துணையாகவிருக்கும் தர்மமெதுவென்று பலநூல்களையுமாராயுமிடத்து ஒழுக்கமே முக்கியமெனச்சொல்லியிருக்கின்றமையால். அவ்வொழுக்கத்தை எவ்விதத்திலும் தப்பிப்போகவொட்டாதபடிக் காப்பாற்றவேண்டும்.

சாதியாசாரத்திற்குத்தக்கவொழுக்கத்தையநுசரித்துநடக்குதலால் நல்லகுலஸ்தனாவானென்றும், அவ்வொழுக்கத்திற்குவிரோதமாய்நடப்பவன் இழிகுலத்தானாவானென்றும், பலநூலிலும் விதியாகச்சொல்லப்பட்டிருக்கின்றது

'பிராமணன் வேதத்தைமறந்துவிடுவானானாலும் மறுபடியுங்கற்றுக்கொள்வான். ஒழுக்கத்தைவிட்டுவிட்டால் அவனது உயர்ந்தசாதித்தன்மைகெடுமேயல்லது உயர்வாகமாட்டாது.

பொறாமையுடையவனிடத்துச்செல்வம் நிலையாததுபோலவே நல்லொழுக்கமில்லாதவனிடத்து மேன்மை நிலைத்திருக்கமாட்டாது.

ஒழுக்கத்தைக்கைவிட்டால் இழிகுலத்தானாகவேண்டுமென்றறிந்தபுத்திமான்கள் அவ்வொழுக்கத்திலிருந்துசிறிதும்வழுவார்கள்.

நல்லொழுக்கத்தால்சிஷ்டத்துவமும், அஃதில்லாமையால் பிரஷ்டத்துவமும், உண்டாகுமென்பதற்கு பிரமாணமென்னவெனில், நன்மைக்கெல்லாம்மூலம் ஒழுக்கமென்றும், தீமைக்கெல்லாம்மூலம் ஒழுக்கமில்லாமையென்றும், சொல்லப்பட்டிருப்பதுவேயாம்.

ஒழுக்கமுடையவர்கள்தங்கள்சாதிக்குங்குலத்துக்குந்தகா

தபொய்முதலியவைகளைமறந்து நீக்கிவிடுவார்கள். ஒருவேளை நீக்காமலிருப்பார்களாகில் நல்லொழுக்கமில்லாத நீசனெனப்படுவதற்குச்சந்தேகிக்கவேண்டுவதில்லை.

கல்விக்குப்பயன் அறிவு. அறிவுக்குப்பயன் ஒழுக்கம். இவ்வொழுக்கத்தையுணர்ந்து நடக்கக்கல்லாதவர்கள் பலநூல்களைக்கற்றும் அறிவிலாரென்றேசொல்லப்படுவார்கள்.

ஆதலால், யாவரும் ஒழுக்கத்தைமேற்கொண்டு நடக்கவேண்டும்.

## நடுவு நிலைமை.

நிதானமாகநிற்குந்தராசு இருபுறங்களிலும்வைக்கப்பட்டிருக்கும் பொருள்களின் ஏற்றக்குறைவுகளை எப்படிதெரிவிக்கின்றதோ அதுபோல நடுவுநிலைமையோர், சிநேகிதர்-அந்நியர்-பகைவர்முதலாகியபெயர்களிடத்துபேதநினைப்பின்றிபொதுவாகவிருந்து காரியங்களைநடத்துவார்கள்.

ஒருவன் நடுவுநிலைமைக்கு விரோதமான வழியில்நின்று சம்பாதிக்கும்பொருள் அளவற்றதாகவிருந்தாலும், அது அப்போதுமாத்திரம் சவுக்கியத்தைக்கொடுப்பதுபோலிருந்துடனே நசித்துப்போகுமாதலால் அவன்பின்பு தரித்திரத்தில் வருத்தப்படுவான்.

தீவினையால்கேடும், நல்வினையாற்செல்வமும், அவரவர்களுக்குமுன்பே விதித்திருந்தாலும், நடுவுநிலைமையிலிருந்து வழுவியதால், தீவினையுண்டாகிறதென்றெண்ணிய பெரியோர் அதைமனதினிடத்திருந்து நீக்கிச்சமமாகநடக்கின்றார்கள்.

நடுவுநிலைமையுடையவர்க்கு வறுமைவரினு மதைப்பெரியோர்களிழிவாக நினையார்கள். ஏனெனில், சத்தியத்தைவழுவாதபடி நடப்பவர்கட்கு வறுமைவராதென்றும், சிலவேளைவரினும்உடனேசூரியனைக்கண்டபனிபோலநீங்கிவிடுமென்றும் பெரியோருரைத்திருப்பதினாலேதான். இதற்குநிதர்சனமென்னவெனில், சத்தியத்தையே பொருளாகவுடைய அரிச்சந்திரனை அசத்தியத்திற்குள்ளாகும்படியாக விசுவாமித்திரரிஷி தம்மாலானமட்டும் பற்பலதுன்பங்களுக்குள்ளாக்கியும், அவன் சத்தியத்தை வழுவாதிருந்தானென்றும், அதனாலேயே அத்துன்பங்களனைத்தும் சூரியனைக்கண்டபனிபோலநீங்கி அவன் பெருமையுங்கீர்த்தியுமடைந்தானென்றும், சொல்லியிருப்பதைவிட வேறுவேண்டுமோ?

நடுவுநிலைமையைவிட்டு அசத்தியத்தில் புத்தியைச்செலுத்தி நடக்கின்றவனுக்கு அதினாலேயே கேடுவருமென்று நல்லோர்களுரைத்திருக்கின்றார்கள்.

ஆதலால், குணவான்கள் நடுவுநிலைமையெனும் பக்ஷபாதமின்மையைக்காத்தலே பலதர்மங்களையுங் காத்தலெனக்கருதிநடந்துகொள்ளவேண்டும்.

# பொறையுடைமை.

பொறையுடைமையென்பது பொறுமையுடைமை. பொறுமையுடையவர்களை எனர்பலவாகஇகழ்ந்துபேசினாலும், பூமிதேவியைப்போலபொறுத்துக்கொண்டிருப்பார்களேயல்லது கோபித்து எனவார்த்தைகளைச்சொல்லார்கள்.

வந்தவிருந்தினரை நீக்கிவிடுதல் தரித்திரத்தில் தரித்திரமெனச்சொல்லப்பட்டிருப்பதுபோல, அறிவில்லாதார்செய்த தீங்கைப்பொறுத்தல் வல்லமையில்வல்லமையென்றுசொல்லப்பட்டிருக்கின்றது

பிறராலுண்டாகுங்கெடுதியைப்பொறுத்துக்கொள்ளாமல் அவர்களுக்குத்துன்பத்தை விளைவிக்கின்றவர்கள் எவ்வளவுசிறந்தவர்களாகவிருந்தாலும், அவர்களை நல்லோர்கள் கண்ணியமாகக்கொள்ளார்கள். அக்கெடுதியைப்பொறுத்துக்கொண்டிருப்போர்களையோவென்றால், மிகவுங்குணவான்களாகக்கொள்வார்கள்: ஏனெனில் பொறுமை கடலினும்பெரிதென்றுகூறப்பட்டிருப்பதினாலேதான்.

ஒருவன்மற்றொருவனுக்குத்தீங்குசெய்தால் அவனதைப்பொறுக்காமல் அதற்குப்பதிலாக மற்றொருதீங்கை விளைவித்து அவனை நாசமுறும்படிச்செய்வதில் பிரயோசனமென்ன? நாம் நினைத்தபடிச்செய்து முடித்தோமென்கிற சந்தோஷித்தானோ! நமக்கு அபகாரஞ்செய்தவனுக்கு நாமும் பிரதியபகாரஞ்செய்தோமென்கிற திருப்தியுமுண்டோ! ஆனால் இவ்விரண்டும் நல்லோர்களுக்குரிய நன்மைகளல்லவே. ஆதலால் இத்தன்மையுடையவர்களை நல்லோர்கள் பழிப்பார்களென்பதையும், ஒன்றுக்குப்பிரதியாகச்செய்யப்படும் அபகாரமும்பாதகந்தான் என்பதையும், கருதிப்பொறுமைகொண்டிருக்கவேண்டும்.

துர்மார்க்கருடைய வாயிற்பிறக்குங் கொடியசொற்களைச் சகிக்கப்பொறுத்துக்கொண்டிருக்கும்படியான குணவான்கள் இல்லறத்தில்வாழும் லவுகிகராகவிருந்தாலும், அவர்கள் துறவ

றத்தில்வாழும்முனிவர்களைப்பார்க்கிலும்சிறந்தவர்களாவார்கள்

ஆகாரம்-நித்திரை-பயம்-மைதுனம்- முதலாகியவைகள் மிருகங்களுக்கும் மனிதருக்கும் சாமான்னியமாகவிருக்கின்றன. ஆனால் மனிதருக்கிருக்கவேண்டிய விசேஷகுணங்களென்னவென்னில், யுக்தாயுக்தங்களைப்பகுத்தறியும் அறிவும், அதினாலுண்டாகும் பொறுமையுந்தானே.

ஒருவன் சாந்திராயணம் முதலியமகாவிருதங்களைப்புரிந்துஉண்டிசுருக்குதல் முதலானவருத்தங்களைப் பொறுத்தாலும் பிறராலுண்டாகுந் தீமைகளைப்பொறாவிடின் அவனுக்குப்பெருமையில்லை. அவைகளைப்பொறுக்கத்தக்கவனானெனில், யாதொருவிருதத்தையுமியற்றாவிடினும், பெருமையடைவான்.

உலகத்தில்பொறுமையென்பதுதான் பலநற்குணங்களிலுஞ்சிறந்தது இக்குணம் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும்இன்னும்பெரியோர்களுக்கும் புத்திமான்களுக்குங்கூட உண்டாயிருப்பது அரிதென்பதைக்குறித்துப்பூர்வீகர்களுரைத்த திருஷ்டாந்திரங்கள்பலவுண்டு ஆதலால் சாமானியஜனங்களிடத்தில்இக்குணமிராதென்பதுசித்தமே. ஆகிலும்இதுகொடியதல்ல. ஏனெனில், துர்மார்க்கரிடத்திலுள்ளபரநிந்தைமுதலானகெட்டகுணங்களைக்குறித்து அவர்களைத்தண்டித்தாகிலும்நன்மார்க்கத்திற்குக்கொண்டுவரமுயலவேண்டியது உத்தமர்களுடைய கடமையெனவுரைத்திருப்பதினாலேதான். இது தீமையிற்பொறையின்மையெனப்படும். மேலும் உலகத்தில்சிலதுர்மார்க்கருண்டு-அவர்கள் துஷ்காரியங்களைச்செய்துகெடுதியடைகிறசமயத்தில்சன்மார்க்கர் யாராகிலும் அவர்களுடையநன்மையைக்கோரிநற்புத்திசொல்வார்களாகில் அதையும்நிந்தையாகக்கொண்டுபொறுமையைவிட்டுக்கோபமடைந்து அவர்களுக்கு அபகாரத்தைச்செய்கிறார்கள் ஒருவன் தனக்குச்செய்யப்படும் நன்மையைக்கூடப்பொறாமலிருப்பானாகில் அவனுடையகுணத்தையென்னவென்றுசொல்லலாம்? நன்மையிற்பொறையின்மையென்றுசொல்லலாமோ? அக்குணமுள்ளவர்களுடைய அவிவேகத்துக்கு அளவுண்டோ? அதை இழித்துச்சொல்லச்சொல்லுண்டோ? அதற்குவமிக்கக்கதையுண்டோ? இல்லை. ஆகிலும் துடர்ந்துவருகிறகதை முக்கியமாய் வேறுவிஷயத்தைப்பற்றியதாகவிருந்தாலும், அதை இவ்விடத்திலுரைக்கலாகின்றது.

அஃதாவது, ஒருவிருக்ஷத்தினிடத்து ஒருபக்ஷிவெயிற்கா

லத்திற்கும் மழைகாலத்திற்குஞ் சவுக்கியமாகவிருப்பதின்பொருட்டு ஒருகூடுகெட்டிக்கொண்டு அதில் வாசஞ்செய்துகொண்டிருந்தது - அப்படியிருக்கையில்நேரிட்ட மழைகாலத்தின் ஒருதினத்தில் அவ்விருக்ஷத்தினிடமாகவந்த ஒருவானரம் அம்மழையில் நனைந்துவருத்தமடைவதைக்கண்டிரக்கமுற்ற அந்தப்பக்ஷி வானரத்தைப்பார்த்து ஓய்வானரமே, நீர் என்னைப்பார்க்கிலும் அநேகம்பங்கதிகமான ஸ்தூலதேகத்தை யுடைத்தாயிருக்கிறீரே, உமக்குக்கைகளுங்கால்களும் நன்றாயிருக்கின்றனவே, நீரும் ஒருவீடுகெட்டிக்கொண்டு என்னைப்போலே சவுக்கியமடைந்திருக்கலாகாதா ! என்று சொல்லியவசனத்தைக்கேட்ட அவ்வானரமதை நலமென்றுணராமல் தனதறிவின்மையால் கோபங்கொண்டு அப்பக்ஷியைநோக்கி நீயோ ஒருசிறியபக்ஷி, என்னைப்பார்த்து இப்படிச்சொல்லலாமோவென்று உடனே அக்கூட்டைப்பிடித்திழுத்துச் சின்னபின்னமாக்கி யெறிந்துவிட்டது. ஆதலால், அறிவிலாதமூடர்கள் நன்மையைச்சொன்னாலும் பொறார்கள்.

சமானமல்லாத ஒருவன் எதிரில்நின்று இழிவானபுன்மொழிகளை வரம்புதப்பிவதறினுமதற்குச்செவிகொடாமல்பொறுமையாகவிருத்தலேபெருமை இதையுணராமல் அவனைவெல்லவேண்டுமென்கிற கருத்துகொண்டவனோடு வாதிடுகிறவனுக்கு முன்னுள்ள பெருமையுங்குறைந்துவிடும். எப்படியெனில், குரைக்குஞ்சுவானத்தோடு குரைக்குந்தன்மைபோலேதான்.

அறியத்தக்கவைகளையறிதலும், அடக்கத்தக்கவைகளையடக்குதலும், அஞ்சத்தக்கவைகட்கு அஞ்சுதலும், இம்மை மறுமைக்குரிய நடைகொண்டுலகத்தைச் சந்தோஷிக்கச்செய்தலும், ஆகியகுணங்களையுடையவர்களே பொறுமையுடையவர்களென்றும், துயரமற்ற வுலகவாழ்க்கையுடையவர்களென்றும், முன்னோர்களுரைத்திருக்கிறார்கள். அறியத்தக்கவைகள் வர்ணாசிரமங்களுக்குரியதர்மங்களெனவும், அடக்கத்தக்கவைகளைம்பொறிகளெனவும், அஞ்சத்தக்கவைகள் பழிபாவங்களெனவும், உலகத்தைச்சந்தோஷிக்கச்செய்தல் இல்வாழ்க்கைநெறிதவறாமல் அதிதிபூசைமுதலிய சத்காரங்களைச்செய்து யாவருங் களிப்புறச்செய்தலெனவுங் கொள்க.

ஆதலால், மனிதன் பொறையுடைமையென்னும் சற்குணத்தைத்தனது ஆசாரியனனுக்கிரகஞ்செய்த மெய்ப்பொருளாகக் கொண்டு நடக்கவேண்டும்.

# பெரியாரைத் துணைக்கொளல்.

தருமத்திலும் சீலத்திலும் வழுவாதிருத்தலும், அறியாமல் நேரிட்டதுன்பங்களைக்கூட உடனே விலக்கிவிடுதலுமான குணங்களையுடையவர்களே பெரியவர்களென்று சொல்லப்படுவார்கள். இப்படிக்கொத்த நன்னெறிநடையுடைய பெரியோர்களை பரிசரித்து அவர்களைத் துணையாகப்பெற்றுக்கொள்வதே ஒருவனுக்குமுன்னோர்வைத்த பொருளினும்மேன்மையானபொருளென்றுசொல்லப்படும் ஏனெனில் அவர்கள்தங்களையடுத்தவர்களைச்சீர்படுத்திநன்மைபெறச்செய்வார்களென்பதினாலேதான்.

தானடைந்திருக்குஞ்செல்வத்தைப்பார்க்கிலும்சிறந்தசெல்வமென்னவெனில், அறிவுடையபெரியோர்களையடுத்து அவர்கள் சொற்படிகேட்டுநடந்து நற்பயன்களைப்பெறுதலேயாம்.

ஒருவனுக்குநட்பாளர் பலபேயிருக்கலாம். ஆனால் அவர்களுக்குள்ளே பெருந்தன்மையும் யோக்கியதையுமுள்ள புத்திசாலிகள் இன்னவர்களென்று புத்திக்கூர்மையால் பகுத்தறிந்துகொண்டு அவர்களைத்தனக்குத்துணையாகப்பெற்று அவர்களைக்கொண்டு தனக்குள்ளகாரியங்களைச்சீர்படுத்திக்கொள்ள வேண்டுமென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறபடி நடப்பவனே நட்பினாலுண்டாகும் பிரயோசனங்களையடைவான்.

பெரியோர்களுடைய சகவாசம்பெற்று அவர்கள்காட்டிய நல்வழியிற்செல்லும் ஒருவனுக்கு ஒருதுன்பமுமுண்டாகமாட்டாது. ஏனெனில் அப்பெரியோர்களுடைய சகவாசமென்னும்அநுக்கிரகமே அவனுக்குநேருந்துன்பங்களைத்தடுக்க அரணாகவிருக்குமென்பதினாலேதான்.

குற்றங்கண்ட அப்பொழுதே கோபித்துத்தக்கபடிப்புத்திசொல்லித் திருத்துகின்ற பெரியோர்களுடைய துணையைப் பெற்ற ஒருவனைக்கெடுப்பதற்காகப் பகையாளிகளொருவருமிருக்கமாட்டார்கள். ஒருவேளையிருந்தாலும் அவர்களுடைய எத்தனம் முடிவுபெறாது.

உறுதியானநல்வசனங்களைச்சொல்லிச்சீர்திருத்துகின்றபெரியோர்களைத்துணையாகக்கொள்ளாதவனுக்கு எவ்வளவுபலமிருந்தாலும், பகைவர்ஒருவருமில்லாவிட்டாலும், விவேகமில்லாமையால்அவன்தானேதீயவழியிற்சென்றுகேட்டையடைவானென்றுசொல்வதற்குப் பிரமாணத்தைத்தேடவேண்டியதேயில்லை.

வியாபாரஞ்செய்யவிரும்பியவனுக்கு முதற்பணமிருக்க

வேண்டும். அப்படிமுதலில்லாமல் வியாபாரஞ்செய்ய விரும்பு வது எத்தன்மையதென்னில், ஏரில்லாதவன் உழுதடித்தானெ ன்றுசொல்லுங்கதைபோலிருக்கும். இதுபோலவே பெரியோ ர்களுடையதுணையைவிட்டு வியாபாரஞ்செய்ய முயல்வோனுக் குமுதற்பணமிருந்தும் இலாபத்தைப்பெறுவதும், ஒருவேளை முதலைச்காப்பதுங்கூட அரிதாகவிருக்கும். ஏனெனில் விவேக முள்ள சமர்த்தருடைய துணையில்லாதவனுக்குக்காரியங்களை ந டத்துங்கூறுபாடுதெரியாதென்பதினாலேதான்.

பெரியோர்களுடையதுணையைக்கைசோரவிட்டுத்தன்மன தின்படிநடக்கமுயல்கின்றவன், பலவிக்கட்டுகளை அனுபவிக்க வேண்டும் அவனுக்குப்பலபெயர்களுடையபகையும்நேரிடும்.

ஆதலால், பெரியோர்களைக்கண்டுஅவர்களோடுறவாடி அவ ர்கள்சொற்படிநடத்தல் நன்மைபயக்குமென்றுணரவேண்டும்.

## அழுக்காறு.

அழுக்காறென்பது ஒருவனுடைய செல்வத்தைக்கண்டு பொறாமைப்படுகின்றதுதான். இப்பொறாமை யில்லாதவனிட த்துச்செல்வம் வளர்ந்தேறுமென்றும், எல்லவருமவனைத்துதிப் பார்களென்றும், கூறப்படுகின்றது.

பிறருடைய செல்வத்தைக்கண்டு அருவருப்புக்கொள்பவ ன் எவ்வளவுமேன்மையுடையவனாகவிருந்தாலும், அவன்தனக்கு ள்ளதர்மத்தையும் புகழையுமிழந்து துன்பப்படுவான்.

இகபரங்களில் துன்பத்தையுண்டாக்கும் பொறாமையெ ன்பது மிகவுங்கேட்டிற்கிடமான துர்க்குணமென்றறிந்த நல் லோர்கள் அக்கொடியதுர்க்குணத்திற்கிடங்கொடார்கள்: ஒரு வேளை கொடுப்பார்களாகில் அவர்கள்பெற்றிருந்த நன்மைகள் யாவும் அப்பொழுதே அவர்களைவிட்டு நீங்கிப்போய்விடும்.

ஒருவனுக்கு உபகாரமாய்க்கொடுக்குந் திரவியத்தைக்க ண்டு பொறாமைப்படுகின்ற ஒருவன் செல்வமுடையவனாகவிரு ந்தாலும், அவனச்செல்வத்தை அப்பொழுதே யிழந்து தரித்திர த்தையடைவதுமல்லாமல் தன்னைச்சார்ந்தவர்களுடையசெல்வத் தையுமிழக்கும்படிச்செய்வான்.

ஒருவனிடத்துச்சீதேவி வாசஞ்செய்துகொண் டிருப்பா ளாயினு மவன் பிறர்செல்வத்தைக்கண்டு பொறாமைப்படுவானா கில் அவனிடத்துவசித்திருந்தசீதேவி யுடனே விலகிப்போய்வி டுவாளாதலால் அவனிடத்தில் மூதேவிவந்துகுடிகொள்வாள்.

பொருமையுடைய ஒருவன் இம்மையில் தனக்குள்ளசெ ல்வத்தையிழந்து தரித்திரத்தில்வருந்துவதுமல்லாமல் மறுமை யில் மோக்ஷத்தையிழந்து நரகவேதனையில்சிக்கிப் பரதவிப் பான்.

பொருமையினலே செல்வத்தையும், பொருமைப்படா மையினலே தரித்திரத்தையுமடைந்தவ ரொருவருமில்லையென் றமுன்ளேருரைத்த வாக்கியங்கள் பலவுண்டென்பதை யுணர் ந்துநடப்போர் பொருமையெனும்பாபத்திற்குட்படார்கள்.

பொருமையுடைய ஒருவனுக்கு வேருெருசத்துருவில்லா விட்டாலும், அவனைக்கெடுப்பதற்கு அப்பொருமையே சத்து ருவாகவிருக்கும். இதற்கொருகதையுண்டு- அஃதெப்படியெ னில்,

ஒருவன் மற்ருெருவனுடைய செல்வத்தைப்பார்த்துப் பொறுக்கமாட்டாமல் காட்டிற்சென்று வாசஞ்செய்துகொண் டிருந்தான். அவ்விடத்தில் ஒருதபோதனர் அவனைப்பார்த்து இரக்கமுற்று ஒருவெண்கலமணியைக்கொடுத்து நீயிதைக்கொ ண்டுபோய் இதற்குப்பூசைசெய்து உன்கோரிக்கையைச்சொல் லிமூன்றுதரம் அடிப்பாயானல் நீகோரியபொருள்யாவும் உன க்கு உண்டாகக்காண்பாய்- இப்படிக்கு மூன்றுதரம் உன்கோ ரிக்கையிடேறும் ஆனல் நீகோரியதற்கு இருமடங்கதிகமாக உன் அண்டைவீட்டுக்காறனுக்குச்சித்திக்கும். ஆதலால் அதற் காக நீபொருமைப்படலாகாது-என்று உரைத்தார். அவன்அந் தமணியைவாங்கிக்கொண்டு வீட்டிற்குவந்து அண்டைவீட்டுக் காறனுக்கு இருமடங்கதிகமாகச் சித்திக்குமென்பதை மறந்து டணிக்குத்தூபதீபங்கொடுத்துத் தனக்குக்கிரகபூமிகள் தனதா னியங்கள் ஆடையாபரணங்கள்மிகவுமுண்டாகவேண்டுமென்று சொல்லிமூன்றுதரம் மணியடித்தமாத்திரத்தில் யாவும் அப்படி யேஉண்டாயிற்று. அவனண்டைவீட்டுக்காறனுக்குமப்படியே அவைகளெல்லாம் இரட்டிப்புஅதிகமாகவுண்டாயிற்று. அதைக் கண்டு பொறுக்கமாட்டாமல் அவன் அயலகத்தானைக்கெடுக்கநி னைத்து இரண்டாந்தரம் மணிக்குப்பூசைசெய்து எனக்கொரு கண் குருடாகவேண்டுமென்றும், மூன்ருந்தரம் பூசைசெய்து என்வீட்டில்பாதிமூழ்கவேண்டுமென்றும், சொல்லிமணியடித் தான். உடனே அயல்வீட்டுக்காறனுக்கு இரண்டுகண்களுங்கெ ட்டு அவன்வீடுமுழுதும் வெள்ளத்தில் அமிழ்ந்துபோயிற்று.

இவ்விதமாய் ஊர்முழுதும் நாசமடைந்தபடியால் சிலதுஷ்டர் கூடி அந்தப்பொறாமைக்காறனையடித்து அவன் பொருள்களை ப்பறித்துக்கொண்டு படகின்பேரில் போய்விட்டார்கள். அப்போது அவன்மிகவுங்கூக்குரலிட்டழுதான். ஆனால் அதைக்கேட்டு அவனையாதரிப்பவர்கள் யாருமில்லாமற்போனார்கள். உடனே அவன் என்னுடையபொறாமையினாலேயல்லவா எனக்கு இந்த ஆபத்துவந்தது. என் அண்டைவீட்டுக்காறனை நசிக்கும்படிச்செய்யாமலிருந்தால் இந்தசமயத்தில் அவர்கள் உபகாரஞ் செய்வார்களே, என்றுவிதனப்பட்டான்.

ஆதலால், பொறாமையென்னுந் துர்க்குணத்தால் தரித்திரத்தையும் ஆபத்தையுமடையவேண்டுமென்கிற நிச்சயத்தையறிந்து அதற்கிடங்கொடாமல் நடக்கவேண்டும்.

## கள்ளாமை.

கள்ளாமையென்பது பிறருடைய பொருள் முதலியவற்றைக்களவுசெய்யாதிருக்கவேண்டுமென்பதாம். களவுசெய்பவர்கள் இம்மைமறுமைப்பயன்களை யிழந்துவிடுவார்களென்று நீதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது.

சோரத்துவத்தினால்வரும்பொருள்மிகுகியாகுவதுபோல் தோற்றினும், அது பாபத்தையும் பழியையும் அவனிடத்துநிலைக்கச்செய்வதுமன்றியவனையல்லாமலே நாசமடையும்.

களவினால்தேடியபொருளை யநுபவிக்கும்போதுண்டாகியசுகம் அக்களவாளிக்கு மிகவுமினிதாகத்தோன்றினும், அது உடனே அவனுக்கு நீங்காததுன்பத்தையுண்டாக்குமென்பதற்கு நிதர்சனமென்னவெனில், பலநாளைத்திருடன் ஒருநாளைக்ககப்படுவானென்றுவழங்குவதும், அகப்பட்டபின்பு பலசனங்களாலுமிகழப்பட்டு இராஜதண்டனையில்வருந்துவதும் பிரத்தியக்ஷமாயிருப்பதுதான்.

பிறருடையசோர்வுகண்டு அவர்களுடைய பொருள்களைத் திருட உடன்பட்டவன் கல்வியில்வல்லவனாகவிருந்தாலுமவனிடத்து அருளுமன்புமில்லையென்பதற்கையமில்லை

களவுசெய்வதில் மிகுதியான ஆசையுடையவொருவன் உலகத்திலுள்ள மனிதர்களுடைய நல்வினையையும் தீவினையையுமறிந்து நடக்க அறிவானோ ! அறியானென்பது சித்தமே.

களவென்னுந்தீயகுணத்தின் அளவையறிந்து நடக்கின்ற நல்லோர்களுடையமனதில் தர்மகுணம் எப்போதும்நிலைபெற்

திருக்கும். இதுபோலவே அத்தியகுணமுள்ள களவாளிகளுடையமனதில் எப்போதும் வஞ்சனையெனுந்துர்க்குணங்குடிகொண்டிருக்குமென்பது அநுபவத்திற்குஞ் சரியாகவேயிருக்கின்றது.

களவெனப்படும் சோரகிருத்தியம் பஞ்சமகாபாதகங்களிலொன்றாகச்சொல்லப்பட்டிருந்தும், அதற்குஅஞ்சாமல் அதைச்செய்கிறவனிடத்தில் மற்றெந்ததர்மமுண்டாயிருக்கும்? ஒன்றுமிராது. மேலும் களவுசெய்கிறவர்களுக்குப் பாவத்தின்பயமில்லாவிடினும், இராஜதண்டனையடையவேண்டுமென்பதுதெரிந்திருக்கையில் அதற்குக்கூடப்பயமில்லாமையால் அவன்பின்னையெதுக்குத்தான்பயப்படுவான். ஆ! கொடியபாதகா, களவாளா, உனக்கும் உன்மக்களுக்கும் என்னகதியோ யார்க்குத்தெரியும்!

களவுசெய்பவன் இம்மையில் அரசனுடையதண்டனைக்கும், மறுமையில் நரகவேதனைக்குமுட்படாமல் தப்பிப்போகானென்பது சித்தமென்று முன்னோருரைத்திருப்பதற்குத் திருடன்பெண்சாதியென்றுங் கைம்பெண்சாதியெனும்பழங்கதைகூட ஒத்திருக்கின்றது.

ஆதலால், களவென்னுஞ்சோரகிருத்தியத்திற் கிடங்கொடுப்பதினால் மகத்தானஆபத்து நேரிடுமென்பதையுணர்ந்ததனிடத்துமனதைச்செலுத்தாமலிருக்கவேண்டும்.

## வெஃகாமை.

வெஃகலென்பது பேராசையும், வெஃகாமையென்பது ஆசையின்மையுமாம்.

பிறருடைய பொருளினிடத்து இச்சைகொள்வது தர்மமல்லவென்று நினையாமல் அவர்கள்பொருளையபகரிக்க உடன்பட்டவன் பலகுற்றங்களுக்காளாகித் துன்பப்படுவதுமல்லாமல் அவனதுகுடியுங்குலமும்நாசமடையும்.

பிறருடையபொருளை அபகரிப்பதினால்வருங் குற்றம் அளவிடக்கூடாததாகவிருக்குமென்றறிந்த நல்லோர்கள் நடுவுநிலைமையின்மையால்வரும்பொருளை அணுகுவதற்கு அஞ்சிநடுங்குவார்கள்.

பிறரிடத்திருந்தபகரிக்கப்பட்டபொருளினால்வரும் இன்பம் நிலையாவிடினும், துன்பம்மாத்திரம் நிலைபெற்றிருக்கும். ஆதலால் நல்லோர்கள் நல்வழியில்வரும்பொருளை விரும்புவார்

களைபல்லாமல் தீயவழியில்வரும்பொருள் எவ்வளவாகவிருந்தாலும் அதை ஒருபோதும் விரும்பார்கள்.

ஐம்புலன்களினுசையையும் பற்றறவொழித்த அறிவுடையோர்,பிறர்பொருளைவிரும்புவார்களோ?விரும்பார்கள். ஏனெனில் உண்மையானபொருளை உள்ளபடி உணர்ந்தவர்கள் அனித்தியமான பொருளினிடத்து ஆசைவையார்களென்பதினாலேதான்.

ஒருவனைவஞ்சித்தீட்டியபொருளினாலுண்டாகும்இன்பத்தை யினியதாகக்கொள்கிறவனுக்குப்பின்னடியில் அதினால்வருந்துன்பம் இப்படிக்கொத்ததென்று தெரிந்திருக்குமோ? தெரிந்திராது தெரிந்திருந்தால் அவன் மற்றவனை வஞ்சிக்கநினையான்.

ஒருவன் செல்வமில்லாதவனாகவிருக்கையில் செல்வத்தையதிகமாகப்பெறுவதற்கும் அதுமேன்மேலும் விருத்தியடைவதற்குங்காரணமென்னவென்று ஆராய்வானாகில் பிறருடையபொருளை விரும்பாமைதானென்று தெரியவரும்.

இதுதர்மம்-இதுஅதர்மமென்று அறிந்துநடக்கின்ற நடுவுநிலைமையோர்கள்பிறர்பொருளையிச்சிக்கவுடன்படார்கள். ஆதலால் இக்குணத்தையுடையவனிடத்து மகாலக்ஷ்மி நிரந்தரங்குடிகொண்டிருப்பாள்.

பிறர்பொருளினிடத்துப் பேராசைகொண்டலைகின்றவஞ்சகர்களுடைய செல்வம் விரிந்தகடல்போலமிகுந்திருந்தாலும் அது ஒரிமைப்பொழுதில்நாசமடையும். ஆனல் அந்தப்பாவம் மாத்திரம் நெடுங்காலம் நிலைபெற்றிருக்கும்.

ஆசையென்பது கொடியதுர்க்குணமென்றும், அஃதின்மைபெரியநற்குணமென்றும் முனைக்கவேண்டி ஒருவித்துவான்விளம்பியதென்னவெனில், ஆசைக்கடிமையானவர்கள் உலகத்திற்கெல்லாம் அடிமையெனவும், ஆசையை அடிமையாக்கிக்கொண்டவர்கட்கு உலகமெல்லாம் அடிமையெனவும் விளம்பினார்.

பேராசையென்பது மிகுந்தகெட்டகுணம். ஏனெனில் அதனால் மனிதனுக்குப்புத்திகெட்டுப்போகும். புத்திக்கேடு நேரிடுமாகில் முன்னுள்ளபொருளும் நாசமடையும். இதற்குத்திருஷ்டாந்திரமாக ஒருசின்னக்கதை சொல்லப்படுகின்றது.

அதாவது, பேராசையுள்ள ஒருகுடியானவனிடத்தில் ஒரு

எருமையிருந்தது அது அவனுக்கு நாள்தோறும்ஒருபடிப்பா ல்கொடுத்துங்கொண்டிருந்தது. அவனதை யொருபணத்துக்கு விற்றுச்சீவனம்பண்ணிக்கொண்டிருந்தான். இப்படியிருக்கை யில் ஒருநாள் அவன் நினைத்ததென்னவெனில், இந்த எருமை கொடுக்கிற ஒருபடிப்பாலினால் எனக்குநித்தியம் ஒருபணந்தா ன்கிடைக்கிறது. இதனால் என்தரித்திரம்ஒருபோதும்நீங்காது. ஆதலால் இந்த எருமையின் மடியையறுத்து அதற்குள்ளிருக் கிறபாலையெல்லாம் ஒருமிக்கவிற்றுப்போட்டால் எனக்குவெ குபணங்கிடைக்கும், என்றுநினைத்து எருமையின் மடியைய றுத்துப்பார்க்குமளவில் அதில் இரத்தமும் மாம்சமுமாத்திரம் இருந்ததேயல்லாமல் வேறொன்றுமில்லாமையால் அவன் வியா குலப்பட்டழுதான். இதில்பேராசையும், அதினாலுண்டாகும் அவிவேகமும், அவ்விவேகத்தாலுண்டாகும் நஷ்டமும், வி ளங்கியதன்மைகாண்க.

ஆதலால், வெஃகலெனும்ஆசைக்குஅதிகமாயிடங்கொடா மல் வெஃகாமையை மேற்கொண்டு திருப்த்தியடைந்திருக்க வேண்டும்.

## செய்நன்றியறிதல்.

செய்நன்றியறிதலென்பது ஒருவன்செய்த உபகாரத்தை மறவாமையாம்.

ஒருவன் பிறனாலே பிரதியுபகாரத்தைவிரும்பாமலேசெய் தஉதவிக்குப்பூலோகத்தையுந்தெய்வலோகத்தையுங்கொடுத்தா லுமீடாகாது. ஏனெனில் ஒருவனுக்குத்தகுந்தகாலத்தில் செய்த நன்றி சிறியதாகவிருந்தாலும் அக்காலத்தைநோக்கும்போது அறிவுடையோரதைப்பெரிதாக நன்குமதிப்பார்களென்பதினா லேதான்.

பிரதியுபகாரத்தைவிரும்பாமலேசெய்த உபகாரம் கடலி னும்பெரிதென்றுசொல்லியதற்கு மேகமேசாக்ஷியாயிருக்கின் றது. எப்படியெனில், உலகத்துக்குநன்மாரிபொழிந்து பாது காக்குந்தன்மையுள்ளமேகம் பிரதியுபகாரத்தை விரும்பாத தன்மைபோலேதான்.

ஒருவன் துன்பமுற்றகாலத்தில் அவனுக்குச்செய்தஉதவி எவ்வளவுஅல்பமாகவிருந்தாலும், அவன்அதை எப்பிறப்பிலும் மறவாதிருப்பானாகிலவனை நன்றியறிந்த மகாபுருஷனென்று ந ல்லோர்கள் புகழ்வார்கள்.

ஒருவனுக்கு ஒருகால் உபகாரமும், பின்பு அநேகம்அபகாரங்களுஞ்செய்யப்பட்டிருந்தாலும், அவன் அபகாரத்தைமறந்துவிட்டு உபகாரத்தைமாத்திரம்பெரிதாகவெண்ணிநடப்பானாகில் புருஷோத்தமனென்று சொல்லப்படுவான்.

ஒருவன்செய்தநன்றியையறிந்தும் அறியாதவன்போலிருந்துவிடுகின்ற நன்றிகெட்டவனுக்கு இகத்திலும் பரத்திலுந்துக்கமுண்டாவதற்குச்சந்தேசமில்லை

ஆதலால் நன்றியறிதலைக்குறித்தும், நன்றியறியாமையைக்குறித்தும், பூஷணதூஷணைகளாக இரண்டுகதைகள் சொல்லப்படுகின்றன.

கதை.

ஒருபட்டணத்தில் ஒருவர்த்தகன் இருநூறுவராகன் கண்டெடுத்து அதைக்குறித்துப்பிரசித்தப்படுத்தினான். அதைப்போக்கடித்துக்கொண்டவன் சமாசாரங்கேள்விப்பட்டு வர்த்தகன்வீட்டுக்குப்போய் வராகன் தன்னதென்று ருசுப்படுத்தினபின்பு வர்த்தகன் அவன்கையில் வராகனைக்கொடுத்துவிட்டான். அதைவாங்கிக்கொண்டவன் நன்றியுள்ளவனாதலால் மிகவுஞ்சந்தோஷமடைந்து வர்த்தகனுக்கு இருபதுவராகன்கொடுக்கப்போனான். ஆனால் வர்த்தகன் தனக்குவேண்டாமென்றான். அவன்மறுபடிப் பத்துவராகனாவது வாங்கிக்கொள்ளவேண்டுமென்றான். வர்த்தகன்அதையும்வேண்டாமென்றுதடுத்துவிட்டபடியால் அவன் ஐந்துவராகனாவது வாங்கிக்கொள்ளவேண்டுமென்று நிர்ப்பந்தித்தான். வர்த்தகன் அதையுந்தள்ளக்கண்டு பணம்போக்கடித்துக்கொண்டவன் மிகவுங்கோபமடைந்து தான்வாங்கிக்கொண்டவராகனைப் பையோடெறிந்துவிட்டுவர்த்தகனைப்பார்த்து, நீயோமகா நிஜஸ்தன்- உன்னுடையசத்தியமெனும் சற்குணத்தால் எனக்கு இந்தப்பணங்கிடைத்தது. நானும் நன்றியறியாதவனல்ல- ஆதலால் நீசெய்தநன்றிக்குப்பிரதிசெய்யவிரும்புகிறேன். இந்தப்பிரதியுபகாரத்தை நீகைக்கொள்ளாதபக்ஷத்தில் இந்தப்பணம் என்னதல்ல- இதற்குடையவனோ அவன்கையில்கொடுத்துவிடு- நான்போகிறேனென்றான். அதைக்கேட்டு வர்த்தகன் ஐந்துவராகன்வாங்கிக்கொண்டு உடனே அதைத்தர்மத்திற் செலவழித்துப்போட்டான். ஆதலால் ஒருவன்செய்த உபகாரத்தைமறவாமல் கவனித்துக்கொண்டிருப்பதும், அதற்காகக்கூடுமானவளையில்பிரதியுபகா

ரஞ்செய்வதும், மிகவுஞ்சிறந்தசுகுணமென்று யாவராலுங்கொண்டாடப்படும்.

## மற்றொருகதை.

ஒருகுடியானவன் தனதுமுயற்சியால் கொஞ்சம்பணஞ்சம்பாதித்துக்கிழவனானபின்பு அதைத்தன்மகன்கையிற் கொடுத்தான். அவனதைக்கொண்டொருவீடுந்தோட்டமும் தட்டுமுட்டுகளும்வாங்கிக்கொண்டு ஊழியக்காறனையும் வைத்துக்கொண்டு சுகசீவனம்பண்ணிக்கொண்டிருந்தான். அப்போதும் அவன்தகப்பன் ஒருகுடிசையில் வாசஞ்செய்துகொண்டும் உடைந்துபோன மண்கலத்தில் சாப்பிட்டுக்கொண்டும் அதைத்தானேகழுவிக்கொண்டுமிருந்தான். அவனுடைய பேரப்பிள்ளைபுத்திசாலியாகையால் தன்பாட்டனுடைய நிலைமையைப்பார்த்து விதனப்பட்டுச்சொல்லியதாவது. நீ இப்போதும் இந்த ஓட்டைக்கலததிலேயே சாப்பிட்டுக்கொண்டும் இதை நீயேகழுவிக்கொண்டும் இருக்கவேண்டுமா? இதை யுடைத்துப்போட்டால் உன் துக்கம் இதனுடன் நீங்கிப்போகுமேஎன்றான். அதற்குக்கிழவன் இதைநான் உடைத்துப்போட்டால் உன்தகப்பன்கோபித்துக்கொண்டு என்னையடிப்பானேஎன்றான். உடனே பேரப்பிள்ளையும்அவனும் அனுகூலமாகிச்செய்த உபாயமாவது, ஒருநாள் கிழவன் தன்மகனும்பேரனும் இருக்கையில் கலத்தைக்கழுவப்போகிறவன்போல் தாழப்போட்டுடைத்தான். உடனே பேரப்பிள்ளை ஒருதடியெடுத்துக்கிழவனையடிக்கப்போனான். அப்போது அவனுடையதகப்பன் அடா-பயித்தியக்காரா கிழவனையடிக்கலாமாவென்றான். நான் அப்படிதான் அடிப்பேன், ஏனென்றால் இந்தக்கிழவன் இந்தஓட்டைக்கலத்தையுடைத்துப்போட்டானே - இனி நீகிழவனாகும்போது உனக்குநான் இப்படிக்கொத்தகலம் எங்கே சம்பாதிக்கமாட்டுவேன்! என்றான். ஆதலால் அவனுடையகருத்தின்னதென்று தகப்பன் அறிந்துகொண்டு கிழவனைவீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் செவ்வையாய் வைத்துக்கொண்டிருந்தான். இதில்நன்றியறியாமையின் தீவினை விளங்குந்தன்மைகாண்க.

ஆதலால், யாவருந்தங்களுக்குச்செய்யப்படும் நன்றியையுணர்ந்து தகுதியானபிரதியுபகாரஞ்செய்யுந்தன்மையை மேற்கொண்டு நடக்கவேண்டும்.

# வாய்மை.

வாய்மை யென்பது மெய்யினதுதன்மை. இது காமக்குரோதங்களைப்பற்றியுண்டாகும் பொய்மையைவிலக்கும் நற்குணமாம்.

ஒருவன் தனக்குத்தெரிந்தது பிறருக்குத்தெரியாதென்றுநினைத்துப் பொய்சொல்லலாகாது. ஏனெனில் அப்பொய்மைவெளியானபின்பு அதையறிந்த அவன்மனமே அவனைச்சுடுமென்றுரைத்திருப்பதினாலேதான்.

பொய்மையைப்பேசாமலும், அதைக்கருதாமலுமிருக்கின்றயதார்த்தவாதிகள் எப்போதும் பெரியோர்களுடைய இருதயகமலத்தைவிட்டு நீங்காதவர்களாக விருப்பார்களென்பதினாலே அவர்களுக்குக்கீர்த்தியும் யசசுமுண்டாயிருக்குமென்பது விளங்குகின்றது.

சரீரம் பரிசுத்தமாவதற்குச்சலமேகாரணமாகவிருக்கும். அதுபோல் மனம் பரிசுத்தமாவதற்கு மெய்மையேகாரணமென்றுணரவேண்டும்.

புறத்திருளைநீக்குவதற்குச் சூரியன்முதலாகிய சோதிகள்ஏதுக்களாக விருப்பதுபோல, அகத்திருளை நீக்குவதற்கு மெய்மையென்னுஞ்சோதியே காரணமாகவிருக்கும்.

மெய்மையென்னுஞ்சத்தியத்தைவிரதமாகக்கொண்டஒருவன் சிறியவனாகவிருந்தாலும் பெருமையடைவான். ஆதலின் அப்படிக்கொத்த யதார்த்தவாதி கேடுறும்படிக்கு அவனதுபகைவர் முயற்சிசெய்தாலும், அவனுக்குத்தெய்வம் சகாயமாகவிருந்து காக்குமெனக்கூறப்படுகின்றது.

ஒருவருக்குங்கொடுக்கப்படாதபொருளைக் கொடேனென்பதினாலே குற்றமில்லை. ஆனால் தன்னைநாடிவந்தவனுக்குதன்னாலியன்ற வுதவியை யுடனேசெய்யாமல் இன்றைக்கு நாளைக்கென்றுதிருப்புவது கொடியபொய்மையாதலால் அப்படிச்செய்யலாகாது.

பொய்யாமையென்பது நல்லோர்க்கியல்பாகவும், மெய்யாமையென்பது தீயோர்க்குச்சுபாவமாகவு மிருப்பதெவ்வாறெனின், சக்கரைக்குத்தித்திப்பும், வேம்பிற்குக்கசப்பும், சுவபாவமா யிருப்பதுபோலவாம்.

மனமும் வாக்குமொத்த மெய்மையை விரதமாகக்கொண்டவர்கள் தவத்தோம் தானமுஞ் செய்வாரைப்பார்க்கிலுஞ் சிறந்தவர்களாவார்கள்.

வாய்மை.

அதிகமாய் பொய்மைக்கிடங்கொடுத்துக் கெட்டபெயர் பெற்றவனுடையவாக்கில் அவாசாத்தாய்வரும் மெய்மைகூடப்பெருமைபெறாது எப்படியெனில் சுராயாண்டத்திற்சுதையென்னும் அமிருதமிருக்கின்றதென்றால் ஒவ்வாத தன்மை போலேதான்.

மெய்பேசுவதினால் எவ்வளவு துன்பம் வருவதாகவிருந்தாலும், நல்லோர்கள் அதைவிட்டுப்பொய்க்குட்படார்கள்.

பொய்பேசுவதினாலெவ்வளவுஇன்பம் வருவதாகவிருந்தாலும், சத்தியவான்கள் இன்பத்தைவிரும்பிப் பொய்பேச வறியார்கள்.

பிறிதோயிர்க்குந்தீமையைத்தராதசொற்களைச்சொலல்வாய்மையெனவும், குற்றமில்லாத நன்மையைப் பயக்குமாயின் பொய்மையானாலும் வாய்மையோடொத்ததெனவுங் கூறப்பட்டிருப்பதைக்குறித்துப் புத்திமான்கள் கொள்ளவேண்டியகருத்தென்னவெனில், பொய்மையால்நன்மையுண்டாகுமாயின் அது தீங்குசெய்யும் பொய்மையைப்பார்க்கிலும் நலமென்பதுமாத்திரமேயல்லாமல் வேறில்லை.

ஆதலால், யாவரும்மெய்மைதவறாமலும், பொய்மைக்கிடங்கொடாமலுமிருக்கவேண்டும்.

## அறன்வலியுறுத்தல்.

மறுமையில் மோக்ஷத்தையும் தேவத்துவத்தையும் தருவதாகிய தர்மத்தைவிட மிகுந்தசெல்வம் வேறொன்றுமில்லையாதலால், தர்மத்தினிடத்துப்புத்தியை நிலைநாட்டிக்கொண்டிருக்கவேண்டும்.

தர்மாநுஷ்டானத்தைப்பார்க்கிலும் மேற்பட்டசெல்வமொன்றுமில்லையென்றும், காமவெகுளிமயக்கத்தால் அதைமறந்துவிடுவதினாலே யுண்டாகிய கெடுதியைப்பார்க்கிலும் வேறொருதுன்பமில்லையென்றும், முன்னோர்களுரைத்திருக்கிறார்கள்.

நற்சிந்தை - நற்செயல் - என்பவைகளே ஒருவனுக்குத் தர்மமாகிய நல்வினைகளென்றும், அவைகட்கு விரோதமானவைகளே அவனுக்குத்தீவினைகளாகிய அதர்மங்களென்றுஞ்சொல்லப்பட்டிருக்கின்றன.

பேராசை - கோபம் - கடுஞ்சொல் - ஆகிய மூன்றுகுணங்களையும் ஒருவன் தன்னிடத்துவந்து சேரவொட்டாதபடித்தூரத்

திலிடுவதில் அசமர்த்தனுகவிருப்பானுகில் அவனிடத்தில்அதர்மம் நிரந்தரங்குடிகொண்டிருக்கும்.

உயிர்க்குத்துணை தர்மத்தைவிடவேறென்றுமில்லையென்றுசொல்லியிருப்பதால், அதைமறவாமல் உடனேசெய்யவேண்டும் ஏனெனில் அதை அந்தியகாலத்திற்செய்வோமென்று நினைத்தாலக்காலத்தில் நமதுபுத்தி எவ்விதத்தன்மையிலிருக்குமோ அறிந்திலேமென்பதினுலேதான்.

தர்மத்தின்பயனித்தன்மையுடையதென்று நூல்களைக்கொண்டு அறியவேண்டியதேயில்லை. ஏனெனில் சிவிகையைச்சுமக்கின்றவனையும் அதிலேறுகின்றவனையும் பார்த்தால் அநுபவமாகத்தெரிந்துகொள்ளலாகுமென்பதினுலேதான்.

நாம் நல்வினையினுலேசுகத்தையும், தீவினையினுலேதுக்கத்தையும், அனுபவித்துக்கொண்டிருக்கிறேமென்று நமக்கே பூர்த்தியாய்த்தெரிந்திருக்கின்றது. ஆதலால், இவ்விருவினையில் நல்வினையென்னுந்தர்மத்தை இடையூறில்லாமல் நடத்திவருவோமாகில் அது பிறவித்துன்பத்திற்குக்காரணமாகிய தீயவழிக்கு ஒருதடைகல்லாயிருக்கும்.

ஓமனமே, அநித்தியமானசரீரத்தைச் சதமென்றுநம்பித் தர்மத்தைச்செய்யமறந்தாய்-இறந்துபோவோமென்பதைச்சற்றுயினுங்கருதாமற்போனுய் - சதமல்லாதவாழ்வையென்னுளுஞ்சதமென்றுநினைத்தாய்-இவ்விதநினைப்புள்ள உன்மீதுயமன் திரும்புவானுகில் அப்பொழுதென்னதர்மத்தைச்செய்யமாட்டுவாய்?

ஓசனங்களே, நம்மிடபிடரியினிடத்து எப்போதும் யமன்குடிகொண்டிருக்கிறனென்று அறியுங்கள். அதையறிந்தால்நாமெடுத்தசடலம் இன்றைக்கோ நாளைக்கோ எப்பொழுதோ விழுந்துபோய்விடுமென்கிற நினைப்புக்கிடமுண்டாகாமற்போகமாட்டாது. ஆதலால் பொல்லாங்கானகாரியங்களுக்கிடங்கொடாமல் விட்டுவிடுங்கள். அவரவர்களுக்கியன்றமட்டும் நல்விஷயத்தில் சீக்கிரத்தில் தர்மங்களைச் செய்துக்கொள்ளுங்கள். விழிக்குச்காணப்படும் எல்லாப்பொருளும் நசித்துவிடுமென்றும், தர்மமொன்றுமாத்திரமே அழிவில்லாமல் நிற்குமென்றுஞ்சொல்லிய நீதியைக்கருதி நடவுங்கள். ஆலசியமாகவிருந்துவிட்டால் வியசனப்படவேண்டியதாகவரும.

ஓமடர்களே, ஆலம்வினா மிகவுஞ்சிறியதாகவிருந்தாலு

மதை நல்ல நிலத்திலே முளைப்பிக்கச்செய்தாலது பெரியவிருக்ஷமாகி விசாலமாகப்படர்ந்து அதனையடுத்தவர்களுக்கு நிழலைக்கொடுத்து ஆதரிக்குமதுபோல சுத்தாத்துமாக்களாகிய நல்லோருக்குத் தர்மமாகக்கொடுக்கும்பொருள் எவ்வளவு அல்பமாகவிருந்தாலும் அது ஆகாயத்தைப்போல விரிவாகி யதைக்கொடுத்தவனை நற்கதியென்னும் மோக்ஷத்தையடைவிக்கும் என்கிற நீதிவசனத்தைக்கவனித்து அந்தப்படி நடக்க முயற்சிசெய்யுங்கள்.

தினந்தோறுஞ் சூரியனுதயமாகிறதையும், அஸ்தமிக்கிறதையும் பார்த்துக்கொண்டிருந்தாலு மதைப்பொழுதுவிடிகிறதாயும்பொழுதுபோகிறதாயும் நினைத்துச்சந்தோஷிப்படுகிறோமேயல்லது அதனால் நமதாயுள் செல்லுகிறதென்றறியாமல் நமக்கு நூறுவயதுண்டாயிருக்கிறதாய் நினைத்து நெடுநாள் வாழ்ந்திருக்கலாமென்று களிகூர்ந்துக்கொண்டிருக்கும்போதே நமதாயுள்மீது யமன் திரும்பிவிடுவானாகில் நாமடைந்தசந்தோஷமெங்கேபோய்விடும்? இதையோசித்தால் முன்னாடியேதர்மத்தைச்செய்யவேண்டுமென்று தெரியவரும்.

ஆதலால், உயிர்க்குமறுமைத்துணையாகிய தர்மத்தை மறவாமல் அதிலேயே முயற்சிசெய்துகொண்டிருக்கவேண்டும்.

## இல்வாழ்க்கை.

இல்வாழ்க்கையென்பது அதிதிமுதலானவர்களுக்கு உதவிசெய்து இல்லாளோடுகூடிவாழ்ந்திருப்பதேயாம். இதுதான் கிரகஸ்தாச்சிரமம்.

பிரம்மசாரி-வானப்பிரஸ்தன்-சன்னியாசி - இவர்களுடையவொழுக்கத்திற்குப்பங்கம்வராமல் அவர்களுக்கு உபகாரஞ்செய்வதிலும், அவர்களுக்குப்பசி நோய் குளிர் முதலானவைகளால்இடர்வரவொட்டாதபடிக்கு அவர்களை ஆதரிப்பதிலும், கவனத்தையுடையவனே இல்வாழ்வோர்களில் சிறந்தவனென்று சொல்லப்படுவான்.

பிதுர்க்கள்-தேவர்கள்-விருந்தினர்-சுற்றத்தார்-தானென்னும் ஐவகையாருக்கும் வேண்டியவைகளை விதிப்படிக்கொடுத்துவருகின்றசெய்கையே இல்லறத்தானுக்குச்சிறப்புடைய தர்மமாம்.

பாபத்திற்கஞ்சி சம்பாதித்தபொருளைத் துறந்தவர்க்கும் பசித்தவறியவர்க்கும் சுற்றத்தார்க்கும் பகிர்ந்து கொடுத்துணே

பதும், இறந்துபோனவர்களுக்கும் பிதுர்க்களுக்கும் நீர்க்கடன்முதலானகர்மங்களைச்செய்வதும். இல்லறத்தானுக்குக்கடமையாம் இவ்விதியைத்தப்பாமல் நடத்துவோன் மறுமையிற் சொற்கத்தில் நிலைபெற்றிருப்பான்.

தன்மனைவியினிடத்து வைக்கவேண்டிய அன்பு இவ்வளவென்றும், அதிதிமுதலானவர்களுக்குப்பகுத்துண்ணுதலாகிய தர்மத்தின்பகுதியிவ்வளவென்றும், அறிந்துநடத்தும் இல்லறத்தானுக்கு இகபரங்களிரண்டிலும் நன்மையுண்டென்றும், அப்படிநடத்தவறியாதவன் இல்லறத்திலிருந்தாலும் அவனுக்குப்பயனும் பண்புமில்லையென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

இல்வாழ்க்கைக்குப்பழுதின்றி நடத்துவோன் ஐம்புலன்களை அடக்கித்தவம்புரிகின்ற பெரியோர்களிலுஞ் சிறந்தவனுவானென்கிற தத்துவம் முன்னோர்களாலே சொல்லப்பட்டிருக்கின்றது.

தவத்தையுடையபெரியோர்கள் அவர்களுடைய நெறிவழுவாமலிருப்பதற்கு வேண்டிய உபகரணங்களை அளிப்பதில்மனவெறுப்பில்லாமலிருப்பவன் இல்லறவாசியாயிருந்தாலும் தவத்தையுடையவனென்றே சொல்லப்படுவான்.

மானிடசன்மத்தைப்பெற்ற ஒருவன் இல்வாழ்க்கையிலிருந்தாலும், அந்நெறிதவறாமலிருப்பானுகில் தெய்வலோகத்திலே தேவர்களிலொருவனுகவிளங்கியிருப்பான், எப்படியெனில் இல்லறநெறிதவறுதவனுக்குச் சொர்க்காதிபோகமுண்டென்று சொல்லியிருப்பதினுலேதான்.

ஆதலால், யாவரும் இல்லறத்திற்குரியநெறிதவறாமல் நடக்கவேண்டும்.

## கற்பு-அல்லது-வாழ்க்கைத்துணை நலம்.

கற்பென்பது, பெண்டிர்க்குரிய கலங்கா நிலைமையாம். வாழ்க்கைத்துணைநலமென்பது இல்வாழ்க்கைக்குத்துணையாகிய தர்மபத்தினியினது நன்மையாம். இக்குணங்களையுடையதலைவியதிவிரதையெனப்படுவாள். இவளுடைய தன்மைதான் பாதிவிருத்தியமெனப்படும்.

இல்வாழ்க்கைக்குத்தக்க நற்குணநற்செய்கைகளையுடையவளாயிருப்பதுமன்றிக்கணவனதுசம்பாத்தியத்திற்குத் தக்கசெலவுசெய்துவருகிறவளே வாழ்க்கைக்குத்துணையாவாள் என்பதில்

நற்குணநற்செய்கைகளென்பதின் கருத்தென்னவெனில், துற ந்தோரையுபசரித்தல்,விருந்தாராய்தல், வறியவரிடத்தருளுடை மை, முதலாகியகுணங்கள் நற்குணங்களெனவும், வாழ்க்கை க்குவேண்டும் பொருள்களைச்சேகரித்துக்காத்தல், உண்டிசமை த்தல், உபகாரஞ்செய்தல், முதலானவைகள் நற்செய்கைகளென வுங் கூறப்பட்டிருப்பதுதான்.

ஒருவனதுமனையாளிடத்தில் கற்புக்குத்தக்கநடக்கையும் இல்லறத்திற்குத்தகுந்த செய்கையுமில்லாதிருக்குமாகில் அவ் வில்வாழ்க்கை செல்வத்தாலெவ்வளவுசிறப்படைந்திருந்தாலும் பயன்படாமல் இகழ்ச்சிபெற்றுத்தாழ்ச்சியடையுமென்று சொ ல்லப்பட்டிருக்கின்றது.

ஒருமனைவியினிடத்துக்கற்புக்குத்தக்க நன்னடத்தைகுறை வின்றிப்பூர்ணமாக விருக்குமாகில் அவள்வளவில் வாழ்க்கைக் குவேண்டிய உபகரணங்களொன்றுமில்லாதிருந்தாலும் எல்லா முண்டாயிருக்கக்காணலாகுமென்றும், நன்னடத்தையில்லாம லும் நிறையில்லாமலுமிருக்கின்ற மனைவியின் இல்லத்தில் எல் லா உபகரணங்களும் விஸ்தாரமாகவிருந்தாலும் ஒன்றுமில்லா ததாகக்காணப்படுமென்றும், சொல்லியநீதியை இப்போதும் நாமனுபவமாகக்காண்கிரும்.

குற்றமற்றமனதையும், கற்புக்குக்குறைவில்லாத நடத் தையையும், உடையபெண்ணைத்தாரமாகப்பெற்றவன் எவ்வள வுதரித்திரனுகவிருந்தாலும் பாக்கியவானென்றேசொல்லப்படு வான்.

ஒருமனையாள் தன்கற்பைக்காப்பாற்றிக்கொள்வதிலும், தன்நாயகனது ஏவற்பணிவிடையிற்குறைவின்றிநடப்பதிலும், இனியசொற்களால் புருஷனைச்சந்தோஷிப்பித்துக் கொண்டிரு ப்பதிலும், மிகுந்தசாக்கிரதையாயிருப்பாளாகில் அவளை மகா புண்ணியவதியென்று உலகம்புகழும். ஆதலால்இதற்குவிரோத மானநடையுடையவள் புகழ்ச்சிபெருமல் இகழ்ச்சிபெறுவாள்.

கடவுளைத்தொழாமல் கணவனையேகடவுளிலுஞ்சிறந்தவனு கவெண்ணித்தொழுகின்ற மகாபதிவிரதையினது வாக்கிற்பிறக் குஞ்சொற்களின் பொருள்முழுதும் அப்படியே நிறைவேறு ம்படியானமகிமை அவளுக்குண்டென்பதற்குப் பெய்யெனப் பெய்யுமழையென்றுரைத்திருப்பது போதுமானநிதர்சனமாக மாட்டாதோ?

ஒருவன் தன்மனைவியைக் காவலென்னுஞ்சிறையிற்படுத்திக்காத்துவந்தாலும் அவள் நிறையில்லாதவளாகவிருப்பாளாகில் பயன்யாதொன்றுமிராது. ஆதலால் ஸ்திரீகளுக்கு நிறையாகியகற்பே முதன்மையானகாவலாகவிருக்கவேண்டியது.

ஒழுக்கம் - நாணம் - மானம் - நிறை - யென்னும் நற்குணங்களையுடையமனையாளே வாழ்க்கைக்குத்துணையாவாள். இக்குணங்களில்லாதஇல்லாளைப்பெற்றபுருஷனதுவாழ்க்கை பாழிடங்களில்வாழும் கோட்டானது வாழ்க்கைபோலாகும்.

பெண்பிள்ளைகட்குச்சிறையைப்பார்க்கிலும் நிறையே காவலென்பதற்குப்பொருள்விவரிக்கப்படுகிறவிதமாவது, சிறையென்பதினால் மதிற்காவல் - வாயிற்காவல் - முதலானவைகளும் நிறையென்பதினால் மனதைக்கற்பின்வழியில் நிறுத்தலும் விளங்குகின்றனவாதலால், நிறைக்காவலே முக்கியமானதென்றும் அஃதில்லாவிடின் சிறைக்காவல் பயன்படாதென்றும் இந்தநிறையுள்ளவளேதர்மபத்தினியென்றும்கூறப்பட்டிருக்கின்றது.

பெண்பிள்ளைகள், புருஷனைக்கண்ணெடுத்துப்பாராமல் தலைவணங்கிநடப்பதே அவர்களுடையசிரசிற்குப் பூஷணமெனவும், கணவனுடைய நடையையநுசரித்துநடப்பதே கால்களுக்கு ஆபரணமெனவும், அவனுக்குப்பணிசெய்வதே கைகளுக்குஅணிகலமெனவும், அவனதுசட்டளையைக்கேட்டுநடப்பதே செவிகளுக்குக்கர்ணபூஷணமெனவும், கூறப்பட்டிருப்பதால் இக்குணமுள்ள தர்மபத்தினிக்கு ஆபரணமொன்றுமில்லாவிடினும் அவள்சர்வாபரணபூஷிதையான மகாலக்ஷிமிபோல் விளங்குவதுமல்லாமல் அவளதுவாக்கிற்பிறக்கும் மதுரவசனங்களால் சரஸ்வதீவிலாஸம்பெற்றவளாய் பிரகாசிப்பாள்.

புருஷனுக்குப்பணிசெய்வதில்அடிமைபோலவும், ஆலோசனைசொல்வதில் மந்திரிபோலவும், முகவிலாசத்தில் மகாலக்ஷிமிபோலவும், அழகிலுமையவள்போலவும், பொறுமையிற்பூமிதேவிபோலவும், அன்பில்தாய்போலவும், கற்பில்அருந்ததிபோலவும், வாக்கில்சரஸ்வதிபோலவும், கணவனதுசயனத்தில் வேசிபோலவும், இருக்கின்றபெண்ணைத்தான் தர்மபத்தினியெனச்சொல்லவேண்டும்.

ஆதலால், பெண்பிள்ளைகள் கற்பென்னுங்கலங்காநிலைமையை மேற்கொண்டு நடக்கவேண்டும்.

# பிறனில்விழையாமை.

பிறனில்விழையாமையென்பது பிறர்மனையாளைவிரும்பாமையாம்.

தர்மசாஸ்திரங்கள்முதலாகிய நற்சாஸ்திர சம்பிரதாயங்களையறிந்து அவ்வழிக்கு மாறுபாடில்லாமல் நடக்கின்ற அறிவுடையோர் ஒருவர்க்குடைமையாகவிருக்கும் மனையாளிடத்து இன்பத்தையநுபவிக்கஒருபோதும் மனவிருப்பங்கொள்ளார்கள். ஒருவேளை யப்படிக்குச்செய்வார்களாகில்அவர்களுக்குள்ள சாஸ்திரவுணர்ச்சியால்பயனில்லையென்பதுமல்லாமல், பகை-பாவம்-அச்சம்-குடிப்பழி-என்னும் நான்குகுற்றங்களும் அவர்களுக்குண்டாகும் இதனால் அவர்களுக்குள்ள இம்மைமறுமைப்பயன்கள் கேடுறும். இதற்குநிதர்சனமென்னவெனில், இராவணன் தனக்குள்ளமேன்மைகளையிழந்து தானுமிறந்து இன்னுமீர்வரையில் வசைபெற்றிருப்பதுவேயாம்.

பிறர்மனையாளைவிரும்பிஅவள்வாயிற்படியினிடத்துச்சுணகம்போற் காத்திருக்கும் காமாதுரனுக்கு எப்பொழுதும் அச்சமே மிகுதியாக விருக்குமாதலால் இன்பத்தையனுபவித்தற்கிடமிராது. இதையுணர்ந்தும் விளக்கொளியை யிச்சித்திறக்கும் விட்டிற்போற் பரமாதர்களின் கவலையால் ஏன் இறக்க உடன்படுகிறார்களோ தெரிந்திலேம். இப்படியிறந்துபோனலும் இந்தப்பழியும் பாபமுமாத்திரமிறவாமல் எப்போதும் நிலைபெற்றிருக்குமென்பதற்குச்சாக்ஷியென்னவெனில், பாண்டவர்களுடைய பத்தினியாகிய துரோபதியினிடத்து மயல்கொண்ட கீசகனிறந்தானென்பதும் அந்த அபகீர்த்தி நாளதுவரையிலுமவனைத்துடர்ந்துகொண்டிருப்பதுந்தானே.

மனதினிடத்து ஐயங்களைப்பற்றறஒழித்துவிட்டநல்லோருடைய மனைவியைத்தாயாகப்பாவிக்கவேண்டிய தர்மத்தைநினையாமல் காமவிகுதியால் அவளது ஆலிங்கனத்தை விரும்பியவன் அருநரகுக்காளாவானென்றும், அவனுயிருடனிருந்தாலும் செத்தசவத்தோடொப்பாவானென்றுஞ்சொல்லிய வசனத்திற்குப்பிரமாணமென்னவெனில், பிரகஸ்பதிபகவானுடைய பத்தினியாகியதாரையென்பவள் தன்கணவனிடத்து வித்தியார்த்தியாகவிருந்த சந்திரனைவிரும்பி யுடன்பட்டாளென்று சொன்னபோதிலும் குருபத்தினியென்கிறவுணர்வின்றித்தர்மத்தைமறந்

து அவளிடத்தில் இன்பத்தை யநுபவித்ததனால் அவனுக்குவந்தபழியும்பாபமும் இன்னும் நீங்கவில்லையென்பதேயாம்.

ஒருவன் எவ்வளவுசெல்வத்தையுஞ் சிறப்பையுமுடைத்தாயிருந்தாலும், காமாந்தகாரத்தினாலே பிறனுடையமனைவியை முறைவழுவாகவிரும்பினால் அதனால்விளையுங்குற்றத்தை அவனப்பொழுதேயநுபவிப்பானென்பதற்குத்திருஷ்டாந்தரம் ரிஷிபத்தினியாகிய அகலியையையிச்சித்ததேவேந்திரனடைந்தஇழிவைவிட இன்னுமென்னசொல்லவேண்டும்?

ஒருவன் தனக்குள்ளசெல்வச்செருக்கினாலேயும் வலிமையினாலேயும் பிறனுடையமனைவியை வசப்படுத்திக்கொண்டின்பத்தையநுபவித்துவந்தாலும் அதனால்வரும்பாபமவனைத்தொடர்ந்து நின்றுகெடுக்கும். அஃதெப்படியெனில் வாலிதன்வலிமையால் தன்சகோதரனாகிய சுக்கிரீவனுடையபாரியையயவசப்படுத்திக்கொண்டு இன்பத்தையநுபவித்துவந்தாலும் அப்பாவமானது அவனதுபிராணனை இராமனுடையபாணத்திற்கிரையாக்கிவிட்டது பொய்யல்லவாதலாலிதையுணர்ந்து பிறன்மனையாளிடத்து மோகங்கொள்ளாதிருக்கவேண்டுமென்பதே நீதியாம்.

தர்மமாகிய நற்காரியத்திலேயே மனதை யுள்ளாக்கிக்கொண்டிருக்குமொருவன் அயலவன்மனைவியினிடத்து இன்பத்தையநுபவிக்க எவ்வளவும் உடன்படான். இவ்விதநிலையிலிருந்து வழுவாதிருப்பதினாலே அவன் இல்லறத்தோர்களில் மேன்மையானவனென்று புகழப்படுவான்.

பிறர்மனையாளைக்கனவிலும்நினையாதவனே ஆண்மைத்தன்மையுடையகுணவானென்று சொல்லப்படுவான். இத்தர்மம் ஒன்றுமாத்திரமேஅவனையடைந்திருக்குமோவென்றால் இல்லை, எல்லாத்தர்மமுமவனையடைந்திருக்குமென்று முன்னோர்களுரைத்திருக்கிறார்கள்.

பிறர்க்குரிய ஸ்திரீகளின்தோள்களைச்சேரஉடன்படாதபுத்திமானிடத்துக்கடல்சூழ்ந்த பூமியினிடத்துண்டாகிய எல்லாச்செல்வமும் முயற்சியில்லாமலேவந்துசேருமென்று நூற்களிற்கூறப்பட்டிருக்கின்றது.

தர்மத்தைச்செய்யக்கனவிலும்நினையாதஒருவன் பாபங்களையேசெய்கின்றானாலும் அவன் பிறன்மனையாளை விரும்பாதிருப்பானாகில் இத்தர்மமொன்றினாலேயே அவன்செய்தபாப

மெல்லாமொழிந்து நன்மையுண்டாகுமென்பது நீதிநூலோர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது.

பிறனுடையதாரத்தைவிரும்பி அதிலேயே பிரமைகொண்டலைகின்ற பிரஷ்டனுக்கு பீதிஅதிகமாயும் இன்பம் அல்பமாயுமிருக்கும். ஆனலதனல்நேரிடும் அபகீர்த்திமாத்திரம் எந்நாளு மவனைவிட்டுநீங்காமல் நிலைத்திருப்பதுமல்லாமல் அவனுக்கு உயிரிழக்கும்படியான பொல்லாதகாலமும் நிச்சயமாய் வந்து லபிக்கும்.

அன்னியனுடைய பத்தினியினிடத்துவிருப்பங்கொண்டிருப்பவன் எவ்வளவு திரவியவானகவிருந்தாலும்அவனிடத்துத் தர்மம்-கீர்த்தி - பெருமை - இவைமுதலாகிய நற்குணங்கள் அணுமாத்திரமும் பொருந்தியிராதென்றும், பகை-பழி-பாவம் - அச்சம் - இவைமுதலாகியதீயவைகள்மாத்திரம் நிரந்தரங்குடிகொண்டிருக்குமென்றுஞ்சொல்லியநீதி சரியாகக்காணப்படுகின்றது.

அயலவன் மனைவியினிடத்து இன்பத்தையநுபவிப்பதின் பொருட்டு வெட்கத்தையும் நாணத்தையும் விட்டுச்செல்வோனை அயற்சனங்கள்கண்டு ஏளனஞ்செய்யினும் உணர்வில்லாமல் அக்கெட்டகாரியத்தையே செய்வானனலும் பலநாளாய்அநுபவித்துவந்த இன்பம் ஒருநாளையில் உயிரிழக்கும்படியாகச் செய்துவிடும்.

ஆதலால், பிறன்மனையாளைவிரும்புவதிலுண்டாகும்பலவிக்கட்டுகளுக்குட்படாமல் நல்விஷயத்தில்சுகத்தையநுபவிப்பதே நலமென்றுணரவேண்டும்.

## வரைவின்மகளிர்.

வரைவின்மகளிரென்னு மிவ்வதிகாரத்தின் விஷயமென்னவெனில், நல்லோர் தீயோரென்கிற வரைவின்றிப் பொருள்கொடுப்போர்க்கெல்லாம் பொதுவாகச்சரீரத்தைப்பயன்படுத்தும் வேசியர்களினியல்பேயாம்.

விளக்கினெளியும் வேசியர் உறவும் சரியாகவுவமிக்கப்பட்டிருக்கின்றது. அஃதெப்படியெனில், தகளியிலிட்டநெய் போய்விடுமாகில் அதனிடமாய்விளங்கிய விளக்கினெளியும் போய்விடும். இதுபோலவே ஆடவரிடத்துப்பொருள்குறைந்தால் வேசியர்க்குறவுகுறைந்துவிடும்.

வேசியரிடத்துத்தேவேந்திரன்வந்தாலும் பொருளில்லா

மைகொண்டார்களாகில் அவனுக்குபசாரஞ்சொல்லிப் போகச்சொல்வார்கள். அப்படிக்குபசரித்துப் போகச்சொல்வதேனென்றால், அவன் பணமுடையவனாகவரும்போது தங்களைத்தேடிவரவேண்டுமென்பதினாலேதான்.

நன்மையற்றநெஞ்சினையுடையவேசியர் பொருளில்லாத ஆடவன் எவ்வளவுகுணவானாகவிருந்தாலும் அவனைமதியார்கள். பொருளுள்ளவனைப்போவென்றால் அவன்கொடுப்பது கொஞ்சமாகவிருந்தாலும் அவனதுபாக்கியம் குபேரசம்பத்தென்றும் அவன் தாதிருத்துவத்தில் கர்ணனென்றும் புகழ்வார்கள். ஏனெனில், கொஞ்சங்கொஞ்சமாயாகிலும் அவன்பொருள்முழுமையுமபகரிக்கலாமென்கிற கருத்தினாலேதான்.

மேலும் அவன்பரம்துர்க்குணியாயிருந்தாலும் அவனைகல்யாணகுணபூர்ணனென்று துதிப்பார்கள் குரூபியாயிருந்தாலும் மன்மதனுக்கொப்பானவனென்றுசிறப்பிப்பார்கள். அவன் நாகரீகமில்லாத மூடனாகவிருந்தாலும் களாசால்லிரங்கற்நசிங்காரசேகரனென்று கொண்டாடுவார்கள். இப்படிக்குக்கபடஞ்செய்து பொருளைவஞ்சிக்கவிரும்பியநாயகிக்கு நாயகனிடத்திலெவ்வளவு அன்புண்டாயிருக்குமோ அதைப்புத்திமான்கள் யோசித்துக்கொள்வார்கள்.

அன்பினதுபற்றினால் விருப்பங்கொள்ளாமற் பொருட்கவர்ச்சியினால் விருப்பங்கொள்ளுகிற விலைமாதருக்குரிய வஞ்சனையும், அதனாற்பிறக்குமின்மொசாலுரைத்தலும், விளக்கமாகத்தெரிந்திருந்தும் அவர்களிடத்து மோகங்கொண்டு சுகமநுபவிக்கவிரும்பியவன் மூடரிலும் மூடனாவான்.

வேசியர்களுடைய இனியசொற்களால் மயங்கிய ஆடவர் தற்காலத்திலின்பமுற்றாலும் பின்பு பொருளிழந்து உடல்மெலிந்து கனங்குறைந்துவருந்துவராதலால் அவ்வின்பங்கொள்ளலாகாது.

பொருள்கொடுக்கின்ற தாதாவினிடத்தில் அன்பில்லாமல் பொருளினிடத்தில்மாத்திரம் அன்புவைத்திருக்கும்வேசியர்களைப்படிக்கொத்தவரென்றால், கூலிக்காகப்பிணமெடுக்கவுடன்பட்டவர்கள்போலாவார்கள் ஏனெனில், கூலிக்குப்பிணமெடுக்கவந்தவனுக்குப் பொருள்மேல் விருப்பமிருக்குமேயல்லது பிணத்தின்மேல் விருப்பமிராதென்பதினாலேதான்.

பொருட்பொருளைமாத்திரம்விரும்பி மற்றப்பொருள்க

ளையிசழாநின்ற வேசியருடைய சயனத்தை அருட்பொருளை யாராய்ந்தீட்டியபுத்திமான்கள் ஒருபோதும் விரும்பார்கள்,

ஒருவன் சாதியினனுயும், வயோவிருத்தனுயும், குரூபியாயும், மிகவும் அருவருப்பான பலரோகங்களுள்ளவனுயுமிருந்தாலும், பொருள்கொடுப்பானுகில் வேசியர்கள் அவனோடுபுணரவுடன்படுவார்களென்பது யாவர்க்குந்தெரியுமே-அட்டடிக்கொத்தவர்களுடைய சயனத்தைவிரும்புகின்ற புருஷனுடைய புத்தி யெப்படிக்கொத்ததாக விருக்கவேண்டுமோ அதையூகித்தறியலாமென்று விவரிக்கவில்லை.

ஒருபுருஷனிடத்தில் நற்குணமொன்றுமிராமற்போனலும்பொருளிருந்தால் வேசியர்கள் இன்பங்கொண்டவர்கள்போல்அபிநயிப்பார்கள். நற்குணங்களெத்தனையிருந்தாலும் பொருள்மாத்திரம் இராமற்போகுமானுல் அவனிடத்திலெவ்வளவுமின்பங்கொள்ளார்கள், ஆதலால் அவர்களுடையமோகம் பொருளையே ஆதாரமாகக்கொண்டிருக்கின்றதென்பது பிரகாசமாய்விளங்குகின்றது ,அவர்கள் ஆடவரைப்பார்த்துரைக்கும்இன்பமானவசனங்கள்யாவும் கபடமென்பதும் விளங்காமற்போகாது.

நல்வழியிற்சம்பாதித்த நற்பொருளை வேசியராகிய துர்ச்சனருக்குபயோகப்படுத்த நற்குலத்திற்பிறந்தமேன்மக்களொருபோதுமுடன்படார்களென்பது அநுபவமாயிருக்கின்றது:

அறிவு-ஒழுக்கம்-இவைமுதலாகியநற்குணங்களால்அடைந்தபுகழை (ஆடல் பாடல் அழகு இவைகளாற்செருக்கடைந்து தங்கள் புன்னலத்தை விலைகொடுப்போருக்கெல்லாம் கொடாநிற்கின்ற வேசியருடைய ஆலிங்கனத்திற்காக) இழக்க உடன்படுகின்றவர்கள் குடிப்பிறப்பில் தாழ்ந்தவரெனவும், கல்வியறிவிற் குறைந்தவரெனவும், இகழப்படுவார்களென்பதற்கு ஐயமுண்டோ?

பலவிதத்திலும் இகழ்ச்சிபெற்றவர்களென்றும் பெருமைபெற்றவர்களென்றும் பேதமறியாமல் பொருளைமாத்திரமே யிச்சித்து அவர்களோடுகூடும் வேசியரது காடாலிங்கனம் ஆலிங்கனமல்ல. என்னவெனில் அவ்வறிவிலாத கீழ்மக்கள் அழுந்தும் அளறொனும் நரகமாம்.

ஆதலால், வளைவின்மகளிரென்னும் வேசியர்களுடைய தோள்களைப்பொருந்த விரும்பாதிருக்கவேண்டும்.

# இரவச்சம்.

இரவச்சமென்பது, மானத்திற்கு இழிவுவரும்படியான இரத்தலுக்கு அஞ்சுதலாம்.

ஒருவனுக்குக்கடவுள் அளித்த அவயவங்களும் புத்தியுக்திகளும் செம்மையாயிருக்கையில், அவைகளைக்கொண்டு செய்யவல்லதாகிய ஓர் முயற்சிசெய்து சீவனமியற்றாமல் மானத்தை விட்டுஇரக்கத்துணிந்தவனுக்குநேரிடுங் குற்றமென்னவெனில் கடவுளளித்தபொருள்களைவீணிற்போக்கியதும், முன்னோர்கள் பெற்ற பெருமையை யிழப்பதுந்தானே.

மனிதருக்குஆயுளும், அதற்குவேண்டிய வுண்டியும், அதற்குரியமுகாந்திரமும், சிரிஷ்டிஸ்திதிசங்காரமெனும் மூன்று தொழிலுக்குங்கர்த்தாவாகிய கடவுளினாலே அமைக்கப்படுமென்றுரைத்திருக்கிறபடிச்சிலமனிதருக்குஇரத்தலேமுகாந்திரமாகக்கற்பிக்கப்பட்டிருக்குமென்று சொன்னால் கடவுளையும்பழிக்குட்படுத்தி நிந்தித்தபாவம்வருமென்பதற்கு ஐயமில்லை.

இரவென்பது வறுமைதீர்தற்கு வழியென்றுசொல்லப்படுமாயின் அது கீழ்மக்களுடைய புன்மொழியாக்கியமென்றிகழப்படும். ஏனெனில் வறுமைதீர்தற்குநல்வழி முயற்சியெனவும், அஃதல்லாது இரத்தல் மானங்கெடும்படியான கீழ்மையெனவுங்கூறப்பட்டிருப்பதை யார்தான் அநுபவத்திற்கொத்ததாக நினையார்கள்!

இரவினால் உலகமுழுதும் இலாபமாக வருவதாயிருந்தாலும் மேன்மக்கள் அதைவிரும்பார்கள். ஏனெனில் இரத்தலால்மானமெனும் பெருமைகுறைந்துபோய்விடுமென்பதினாலே தான்.

முயற்சியினால்வந்த கூழ் தண்ணீர்போல் தெளிந்ததாகவிருந்தாலும் அது இரவாமல் முயற்சியால்வந்தபடியால் அமிருதத்திற்குச்சமானமாகக்கொண்டாடப்படுமென்பதே மேன்மக்களுடையகருத்தாம்.

ஒருவன் தர்மத்தைச்செய்யவிரும்பினாலும் முயன்றுசெய்யவேண்டுமேதவிர இரந்துசெய்யலாகாது. ஏனெனில் பசியால்வருந்தி யுயிரிழக்குந்தன்மையிலிருக்கும் பசுவிற்கு நீர்வேண்டுமென்று கேட்கினும் நாவிற்கிளிவுண்டென்றுரைத்திருப்பதினாலேதான்.

ஒருதிருணத்தைக்காட்டிலும் இலகுவானதுபஞ்செனவும் பஞ்சைக்காட்டிலும் இலகுவானவன் யாசகனெனவுங்கூறப்பட்

டவிடத்தில் சிறியகாற்றினால் பஞ்சிற்குமாத்திரம் அலைவுண்டாயிருக்கின்றதேயல்லாமல் அவனுக்கொரு வருத்தமுமில்லையே-என்றதற்குத்தரவு என்னவெனில், தன்னையும் யாசிப்பானென்கிறபயத்தினால் வாயு அவனைநெருங்கவில்லையென்பதுதான்.

ஒருவன் எவ்வளவுகல்விமானாகவிருந்தாலும் மானத்தைவிட்டு இரக்கப்புகுவானாகில் அவனதுபெருமை குறைவதுமல்லாமல் அவன்கற்றகல்விக்கும் பெருமைகுறையும். ஆதலால் அந்தஅபகீர்த்திக்கு அவன்பாத்திரனாகவேண்டும்.

இரக்கப்புகுவது இழிவானதென்றுரைப்பதற்கு மிகவும் வெளிப்படையாகவிருக்கிற (ஏற்பதிகழ்ச்சி) யென்னும்வசனமொன்றே போதுமென்பதைக்கருதினால் விரிவாகச்சொல்லவேண்டியதில்லையென்பது சரியாம்.

இரந்துசீவனம்பண்ணுகிறயாசகன் மரணமடைகிறவனுக்குச்சமானமாக ஒப்பிடப்படுகிறான். எப்படியெனில் ஒருயாசகன் ஒருபிரபுவினிடத்தில் யாசிக்கப்போகும்போது அவனுக்குப்பயமும், அதனால் உடல்நடுக்கமும், வாய்குளறலும், உடற்றுவட்சியும், இலச்சையும்உண்டாகின்றன. இக்குறிகள்மரணமடைகிறவனுக்கு முண்டென்பது கருத்து.

ஆதலால், கீழ்மக்களுக்குந்தகாதஇரவை யொருபோதும் நினையாமல் மானத்தோடு முயற்சிசெய்து சீவனமியற்றவேண்டும்.

# சொல்வன்மை.

சொல்வன்மையென்பது ஒருவன்முயலுங்காரிய முடிவதற்குத்தகுதியான வார்த்தைகளைச்சொல்லுதலேயாம். ஆதலால், ஒருவன்சொல்லும்வசனம் நிதானமாயும் தகுதியாயுமிருக்கவேண்டும்.

சமாஜமென்னும்சபையினிடத்துச்சென்ற ஒருவன்தன்மனதிலுதித்த விஷயங்களை வெளியிட்டுப்பேசுதற்கு முன்னமே அச்சமாஜத்தாருடைய குணங்களையும் அவர்களது நிலைமையையும் அறிந்து பின்பு பேசுவானாகில் அவனுக்கு உலகமுழுதும் வசமாகிநிற்குமென்றும் அவனுக்குக்கூடாதகாரியமொன்றுமில்லையென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

சமாஜங்கூடியிருக்குமிடங்களில் எப்போதும் புத்திமான்கள் மிதமாகவேயிருப்பார்கள். ஆனாலவர்கள் தங்கள்சொல்வன்மையால் அச்சபையிலிருக்கும் மற்றவர்களையும்தங்களோடு

சமரசப்படுத்திக்கொண்டு காரியத்தைவிரோதமின்றிநடத்துவார்கள். அப்படிக்கொத்தபுத்திமான்களில்லாத சமாஜத்தார் ஒரு காரியத்தையும்நடத்த அறியார்கள்.

ஒருவனுக்குப்பெருக்கமும் குறுக்கமும்உண்டாவதற்குச்சமயோசிதமான வார்த்தைகளின் சோர்வேகாரணமாகவிருக்குமாதலால், பேசும்போது சோர்வில்லாதசொல்வன்மையைக்கொண்டு காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளவேண்டும்

ஒருவன் பிறனோடுவசனிக்குமிடத்து முன்னாடிதன்திறத்தையும் முன்னிலையின்திறத்தையுங்கண்டறிந்து பின்பு தான் நினைத்தவார்த்தையை வெளியிட்டுச்சொல்லவேண்டும் அப்படிச்சொல்வதைப்பார்க்கிலும் தர்மம் வேறில்லையென்றுசொல்லப்பட்டிருக்கின்றது.

தான் மொழியும்சொற்களை நம்பிக்கையால் ஒத்துக்கொள்ளுகிறவர்கள் அவைகளின் அபிப்பிராயத்தில்நின்றும் வேறுபடாமலிருக்கும்படியாயும், நம்பிக்கையின்மையால் ஒத்துக்கொள்ளாதவர்கள் ஒத்துக்கொள்ளும்படியாயும், தகுந்தசொற்களையும் பொருட்களையும் அமைத்துப்பேசவல்லவனே புத்திமானெனப்படுவான்.

ஒருவன் தான்சொல்லநினைத்தசொல் மற்றொருவன்சொல்லால்வெல்லப்படுமென்பதையும் வெல்லப்படாதென்பதையும் அறிந்துசொல்லுவானாகில் அது எப்போதும் மேன்பாடடைந்திருப்பதுமன்றி விரும்பிய பலனையுந்தராமற்போகாது.

பிறரோடுபேசி அவர்களுக்கு இன்பத்தையுண்டாக்கவும் நினைத்தகாரியத்தைச்சாதித்துக்கொள்ளவும் விருப்பங்கொண்ட ஒருவன் தனதுமுன்னிலையின் அபிப்பிராயங்களைக்குறித்தாக்ஷேபிக்கவேண்டுமானால் மிருதுவாயும் நயமாயும் சரியாயும் ஆக்ஷேபங்களைவெளியிட்டுத்தெரிவிக்கவேண்டுமேயல்லது கபடமாயும் வெறுப்பாயும் பேசலாகாது.

ஒருவன் மிகுந்ததிரவியவானாயிருந்தாலும், கல்வியிற்சிறந்தவனாயிருந்தாலும், சமாஜத்திற்பேசத்துவக்கும்போது சில வினயவசனங்களைச்சொல்லவேண்டும். அவைகள்மிதமாயும்தகுதியாயும் இன்பமாயுமிருக்கவேண்டும். எப்படியெனில் புத்திமான்களாற்சிறந்த இந்தசமாஜத்தார் முன்பாகப்பேசும் திறமெனக்கில்லாமற்போனாலும் பேசவேண்டுமென்கிற விருப்பமுண்டாயிருக்கிறபடியால் புத்திமான்கள்தயைசெய்து செலவுகொடுக்கவேண்டுவதுமல்லாமல் நான்பேசுவதில்காணப்படும்பி

ழைகளைக்குறித்து தயையுடன் மன்னிக்கவேண்டுமென்கிறது முதலான உபசாரவார்த்தைகளைச் சங்கதிக்குத்தக்கபடி மரியாதையாய்ச்சொல்லவேண்டும்.

ஒருவிவாதசங்கதியில் ஒருவன்பக்ஷத்தில்நியாயமும், அதற்குவேண்டிய சாதனங்களும் பூர்ணமாயுமிருந்தாலு மதைக்குறித்து எதிரியுடன்பேசுமிடத்து உரத்தசத்தத்துடனேயும், வெறுப்புடனேயும் பேசலாகாது. ஆனால் தனக்குள்ள தாற்பரியங்களைவினயமாயும் சாந்தமாயும் சொல்லவேண்டும். அப்படிச்சொல்வதில் அவனுக்குநியாயம்விளங்காமற்போகுங்காலத்தில் அதைநிறுத்தி வேறுவிஷயத்திற்பிரஸ்தாபத்தைமாற்றிப் பின்பொருவேளையில்தெரிவிக்கவேண்டும்.

துர்க்குணத்தைக்குறித்து இழிவாயும், நற்குணத்தைக்குறித்துமேன்மையாயும், பேசும்புத்திமானுடையசிந்தை ஒன்றையும்நாடாமல் சுபாவமாயும் பரிசுத்தமாயுமிருந்தாலும் அறிவிலாரதைச்சரியாகக்கொள்ளாமல் ஒன்றைநாடிப்பேசுகிறதாக நினைப்பார்கள். ஆதலால் பேசும்விஷயம் ஆக்ஷேபிக்கிறதாக நினைக்கக்கூடாமலிருப்பதே சொல்வன்மையென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

எப்போதும் தொணுப்பாகப்பேசுகின்றஒருவன் தனது மெலிந்ததொனியுடனேபேசுகிற நீடித்த வீண்சங்கதிகளைக்கேட்பதற்குத் தான்சென்றிருக்குங்கூட்டத்திலுள்ள ஒருநிர்ப்பாக்கியனைப்பிரத்தியேகப்படுத்திக்கொள்வதுண்டு. அப்படிப்பிரத்தியேகப்படுத்திக்கொள்வது மிகவும் அசம்பிரதாயமென்றும், சொல்வன்மைக்குப் பொருந்தாத செய்கையென்றும், சொல்லப்பட்டிருக்கின்றது.

ஒருகூட்டத்திலாவது மற்றெந்தவிடங்களிலாவது ஒருவன்தன்விஷயமான பிரஸ்தாபத்தைப் பேசவேண்டும்பொழுது நேராயாவது பரஸ்பரமாயாவது தான் புகழ்ச்சியைவிரும்பியதாகத்தோற்றப்படத்தக்க ஒருசொல்லையாவது தன்வாயிற்பிறக்கவொட்டாமற் சாக்கிரதையாய்ப் பேசவேண்டும். இதுவே சொல்வன்மைக்குரிய தர்மமாம்.

நற்குடிப்பிறப்பினரும், மேன்மக்களும், கல்விமான்களும், அப்படியே புத்திமான்களும், ஒருசபையிற்பிரவேசிக்க உடன்படார்கள். பிரவேசித்தால் நியாயத்திற்குவிரோதமாய்ப் பேசத்துணியார்கள். ஏனெனில், பேசவேண்டியதைப்பேசாமலிருக்கும்படி சோர்வுநேரிட்டாலும் பேசவேண்டியதைப்

பார்க்கிலும் அதிகமாய்பேசும்படித்துணிவுநேரிட்டாலும் குற்றமுண்டெனக்கூறப்பட்டிருப்பதினாலேதான்.

ஆதலால், புத்திமான்கள் சொல்வன்மைக்குரிய விஷயங்களையோசித்து அந்தப்படிப்பேசமுயலவேண்டும்.

## செங்கோன்மை.

செங்கோன்மையென்பது அரசனாலேசெய்யப்படும் முறையின்தன்மை. அந்தமுறை செவ்வையாகியகோல்போல்ஒருபக்கத்திலுஞ்சாயாமல் இருப்பதால்செங்கோலெனப்பட்டது.

தனது அரசாட்சியின்கீழ்வாழ்கின்ற குடிகள்முதலானஜனங்களால் செய்யப்படுங்குற்றங்களைப் பரிசோதித்து அவர்களுக்குமுகங்கொடாமல் நடுவுநிலைபொருந்தி அந்தந்தக்குற்றத்திற்குரிய தண்டனைசெய்து துஷ்டநிக்கிரகஞ்செய்தலே அரசர்கட்கு முறையென்று கூறப்பட்டிருக்கின்றது.

உலகத்திலுள்ள சகலசராசரங்களும் வானத்தினின்றுபொழியும் மழையைநோக்கி வாழ்வதுபோல தேசத்தின்குடிகள்முதலான சனங்கள் அரசனதுசெங்கோன்மையினின்று பொழியுங்கிருபாரசமென்னுமழையைநோக்கி நன்குவாழ்வார்கள்.

அந்தணர்க்குரிய வேதங்களும், அவைகளிற்சொல்லியதர்மங்களும், அனாதியென்றுரைக்கப்பட்டிருந்தாலும் அரசனுடைய செங்கோன்மையே அவைகட்குக்காரணமாகவிருக்கின்றது. ஏனெனில் அரசனானவன் வேதியர்களையாதரித்து அவர்களுடைய கடமைகளைச்செலுத்தும்படிச்செய்து தர்மங்களை நடத்தாவிடின் அவைகள்பிரகாசமாய் உலகத்தில் விளங்காவென்பதினாலேதான்.

தன்கீழ்வாழுங்குடிகள்முதலான சனங்களைத்தழுவி துஷ்டநிக்கிரகஞ்சிஷ்டபரிபாலனஞ்செய்துவரும் செங்கோன்மையுடைய மகாராஜனது பாதாரவிந்தங்களை உலகத்திலுள்ளயாவருந்தழுவிவாழ்வார்கள்.

அணைத்தலென்பதின்பொருளிலடங்கிய இன்சொல்லுரைத்தல், தளர்ந்தவிடத்துவேண்டுமவைகளைக்கொடுத்தல், முதலாகிய நற்குணங்களையுடைய மகாபுருஷனே நிலத்தை ஆள்வானாகையால் அவன் மாநிலமன்னனென்று சொல்லப்படுவதுமன்றி அவனிடத்து யாவரும் நீங்காத அன்புடையவர்களாவார்கள்.

தர்மநூற்களிற்சொல்லப்பட்டிருக்கும் விதிகள்தவறாமல் செங்கோல்செலுத்துகின்ற மன்னவனுடையநாட்டில் காலம

ழையும் குறைவில்லாதவிளைவுமுண்டாயிருக்கும், ஆதலால்செ ங்கோன்மையுடைய மன்னவனதுநாட்டிலே வானமும் நிலமு ஞ்சேரத்தொழிற்பட்டு வளஞ்சுரக்குமென முன்னோர்களுரை த்திருக்கிறார்கள்.

இராஜதர்மங்களையறிந்து பிரபுத்துவஞ்செய்கின்ற மகா ராஜாவானவன் ஜயம்பெறுவது அவனுக்குள்ள ஆயுதப்பயிர்ச் சியினாலும் சேனாபலத்தினாலும் அல்லவெனவும், ஆனால் அவன துநீதிதவறாத செங்கோன்மையினாலேதானெனவும், முன்னோ ருரைத்திருக்கிறார்கள்.

கொடியோர், தீயோர், தீயிடுவோர், நஞ்சிடுவோர், கொலை பாதகஞ்செய்வோர், களவுசெய்வோர், வழிகட்டிப்பறிப்போர், பிறன்மனையாளைவிரும்புவோர், இவைமுதலாகிய கொடியகிரு த்தியங்களைச்செய்யும் துஷ்டர்களைக்கண்ட அரசன் அவர்களைத் தக்கபடித்தண்டிக்காமல் விட்டுவிடுவானாகில் புல்முதலாகியக ளைகளாற் பயிர்கள்கெடுதியடைவதுபோல் உலகத்தார் பலவரு த்தங்களையடைந்து துன்பப்படுவார்கள்.

அரசனானவன் பூமிமுழுதையுங்காப்பாற்றுவான், அவன துசெங்கோலானது முறைதப்பாமல் செலுத்தப்படுமாயின் அவனைக்காப்பாற்றும். முறைதப்பாமல் செங்கோல்செலுத்து ம்விதம் மகனைத்தேர்க்காலில்வைத்தூர்ந்த சோழனிடத்திலும் அயலார்வீட்டுக்கதவைத்தட்டிய தன்கையைக்குறைத்தபாண்டி யனிடத்திலும்விளங்கும்.

ஆதலால், அரசரதுசெங்கோன்மையை யாவரும் விரும் பவேண்டும்.

## கொடுங்கோன்மை.

அரசனாலியற்றப்படும் முறையினது கோணுதற்றன்மை யே கொடுங்கோன்மையெனப்படும்.

பொருளைவிரும்பிக்குடிகளைவருத்தி முறையல்லாதகாரி யங்களுக்குட்படுத்துகிற அரசனானவன் கொலைபாதகனைப்பா ர்க்கிலும் கொடியவனாவான் எப்படியெனில், கொலைபாதகன் செய்வது சிலருக்குச்சிலநாளைத்துன்பம். இவன்செய்வதோ வெனில், எல்லோருக்கும் எந்நாளுந்துன்பமாம். ஆதலால அவர்களிலும் இவன் கொடியவனாவானெனக் கூறலாயிற்று.

தனதுநாட்டில் நடந்துவருந்தீமைகளையாராய்ந்துஅவை களை நீக்கத்தக்க முறைமையைச்செய்யாத ராஜாவானவன் தன துராச்சியத்தை யிழந்துபோவதுமல்லாமல் பழிக்கும்பாவத்தி

ற்குமாளாவர்ன்.

இனிவருங்காரியங்களை நினையாமல் முறைதப்பியாளுகின்றமன்னவன் பூர்வார்ச்சிதத்தையும் அதற்குக்காரணராகிய குடிகளையும் ஏககாலத்தில் இழந்துபோவான்.

அரசர்க்கு ஆதாரம் அவர்களியற்றுஞ் செங்கோன்மையாதலால், அஃதில்லாவிடின் அவர்களுடைய அரசாட்சிநிலைபெறுதென்பது நிலையாம்.

அளியென்னும் அருள்பொருந்தாத அரசனதுநாட்டில் வாழுங்குடிகளுக்குள்ளதுன்பம் எத்தன்மையதெனில், துளியென்னும்மழையினது இன்மையால் உயிர்களுக்கு நேரிடும் துன்பத்தின்தன்மையாம்.

இராஜதர்மந்தெரிந்து பிரபுத்துவஞ்செலுத்த வறியாதவனும், தனக்குரிமையானகடமைக்கதிகங்கொள்ள விருப்புற்றவனுமான கொடுங்கோன்மன்னனுடைய நாட்டில்வாழுங்குடிகளுக்குச்செல்வத்தைப்பார்க்கிலும் தரித்திரமேகொண்டாட்டத்தக்கதாயிருக்கும். ஏனெனில் அடி குத்துமுதலானவைகள்பொருளுடையவர்க்கே நேரிடுமென்பதினாலேதான்.

சகலதர்மங்களையுங்காப்பதையே கடமையாகவுடைய ராஜாவானவன் தர்மந்தவறிநடப்பானாயின் அவனதுநாட்டிற்சகலதர்மங்களும் அழியுமென்பது சித்தமே.

உருண்டோடுகின்ற குண்டுக்கல்மேல்வைக்கப்படும்பொருளும், கொடுங்கோன்மன்னன் சிரசின்மேல்வைக்கப்படும் முடியும், க்ஷணகாலமாவது நில்பெறுதென்பதை யார்தான் ஒத்துக்கொள்ளார்கள்?

சகலஜனங்களுக்குங் கண்டகனாயிருக்கிற ராஜனிடத்தில் அவனதுநாட்டின் குடிகள்முதலான ஜனங்களுக்கும் நகரத்தின்பிரபுக்கள்முதலான மேன்மக்களுக்கும் அரண்மனையின்மந்திரிபிரதானிசேனாபதி முதலான வீரருக்கும் பூர்ணமானபகையுண்டாயிருக்குமாதலால், அவர்களேகோபித்துப் பரராஜனுக்குடன்பட்டுக்கண்டகனான தங்கள்ராஜனுக்கு ஆபத்துவரும்படிச்செய்வார்கள்.

ஆதலால், அரசர்கள்கொடுங்கோன்மையைவெறுக்கவேண்டியதுபோலவே யசமானர்கள் யாவருந் தங்களையடுத்தவர்களிடத்திற்கொடுமைசெய்யாமலினிமையைச்செய்துவரவேண்டும்.



